# கல்கி

KALKI 9-8-81 ரூ. 1.20


"என்னதான் கிரைண்டர்லே மாவு அரைச்சாலும், மாப்பிள்ளேயும் ஒரு கை அரைச்சால் தான் இட்லி 'மெத்'துன்னு இருக்குது!"



# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...



**...இதர, டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.**

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேளை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.

நீங்களே கண்டுகொள்வீர்கள்

இதை வெளுத்தது வேறுசில டிட்டர்ஜெண்ட பார்





இதை வெளுத்தது ஸூப்பர் ரின்




அதிக வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸூப்பர் ரின்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-RIN.35-2012 TM





# விபத்துக்கள் இல்லாத ரயில்வே

உலகத்திலேயே மிகவும் வேகமான ரயில்கள் ஜப்பானிய தேசிய ரயில்வேக்குச் சொந்தமானவை. இந்த ரயில்களை ஷின் கான் ஸென் என்பர். துப்பாக்கி தோட்டா வடிவில் இருப்பதாலும் படு வேகமாய்ப் பாய்வதாலும் — மணிக்கு 210 கிலோ மீட்டர் — புல்லெட் என்ற பெயரும் உண்டு.

ஷின்கான்ஸென் உருவாகி 17 ஆண்டுகள் ஆகின்றன. 138 கோடியே 35 லட்சம் பயணிகளை இந்த ரயில்கள் ஏற்றிச் சென்றுள்ளன. இதுவரை மரண விபத்து ஒன்று கூட இல்லை.

இன்று இரு மார்க்கங்களில் ஷின்கான் ஸென் ரயில்கள் ஒவ்வொரு நாளும் மூன்றரை லட்சம் பயணிகளுடன் உலகை நாலு முறை சுற்றி வரும் தூரம் பயணமாகின்றன. ஆயினும் ஒரு விநாடி தாமதம் கிடையாது.

ஒரு நெருக்கடி, ஆபத்து என்றால் ரயிலை நிறுத்துவதுதான் இன்ஜினியர்களின் மாபெரும் பொறுப்பு. வழக்கமான 'பிரேக்' எனில் 600 மீட்டர் சென்றுதான் வண்டி நிற்கும். அது அதிவேக புல்லெட்டுக்குப் பயன்படாது. எனவே தானியங்கு முறையில் ரயில் வேகம் நிர்ணயமாகிறது.

எதிரே ஒரு ரயில் வருகிறது. அல்லது ரயில் நிற்க வேண்டிய ஒரு ஸ்டேஷனை நெருங்குகிறது எனில் ரயில் எந்த வேகத்தில் செல்ல வேண்டும் என்பதற்கு ஸிக்னலை, ரயில் தண்டவாளத்திலிருந்து பெறுகிறது. அந்த ஸிக்னலை ரயிலில் ஏற்கின்ற கருவி, தானியங்கு முறையில் பிரேக்கை இயக்கி ரயிலின் வேகத்தை அனுமதிக்கப்பட்ட அளவுக்குக் குறைத்துக் கொண்டு வருகிறது.

தவிர மத்திய டிராஃபிக் கண்ட்ரோல் அறை டோக்கியோவில் உண்டு. எல்லா ரயில்வே ஸ்விட்ச்சுகளையும் சிக்னல்களையும் இங்கிருந்தபடி கட்டுப்படுத்த முடியும். 1069 கி. மீட்டர் நீளமுள்ள ரயில் பாதைகளை டோக்கியோ கண்ட்ரோல் அறை நிர்வகிக்கிறது.

ரயில் பாதையில் கிராஸிங் ஏதும் கிடையாது. மேம்பாலம் அல்லது பாதாளப் பாதைதான். மேம்பாலத்தில் ஒரு கார் விபத்துக்குள்ளானாலும் அது ரயில் பாதையில் விழ முடியாதபடி பாதுகாப்பு அரண் சாலையின் இருபுறமும் உண்டு.

ஒன்பது இடங்களில் புல்லெட் ரயில்களைப் பழுது பார்க்கும் பட்டரைகள் உள்ளன. 30,000 கிலோ மீட்டர் அல்லது 30 நாள் ஓடிவிட்டால் ஒவ்வொரு புல்லெட் ரயிலும் விரிவான கட்டாய பரிசோதனைக்கு உள்ளாகிறது. மயிரிழை விரிசல் எங்கேனும் காணப்பட்டாலும் செப்பனிடப்படுகிறது.

தவிர ரயில் பாதை கண்காணிப்புக்கு 5000 பேர் அடங்கிய படை உண்டு. நள்ளிரவுக்குப் பின் இவர்கள் ரயில் பாதைகளை நுணுக்கமாய்ப் பரிசோதித்து உடனுக்குடன் தேவையான ரிப்பேர்களைச் செய்கிறார்கள்.

நன்றி: ப்ளி:ஃபிக் ஃப்ரெண்ட்

[அரசாங்கப் பிரசாரத்துக்குக் கதாகாலட்சேபக்காரர்களைப் பயன்படுத்தப் போவதாக மகாராஷ்டிர முதல்வர் திரு அந்துலே தெரிவித்தார். தமிழக அரசும் இந்த உத்தியைக் கையாண்டால்....]

எல்லாம் வல்ல முருகப் பெருமானின் அருளாலே ராமச்சந்திர மகிமை என்ற பொருள் பற்றி அடியேன் இன்றைக்குப் பேச எண்ணியிருக்கிறேன்.

சென்ற ஆண்டு மே மாசம் மறுபடியும் ராமச்சந்திரன் ஆட்சிக்கு வந்தார். அதற்கு முன்னால் புதுடெல்லியில் ஆட்சி மாறியது. அன்னை ஆட்சிக்கு வந்தார். அன்னை என்று சொன்னவுடனே அருணகிரியார் ஞாபகம் வருகிறது. அற்புதமாகப் பாடியிருக்கிறார் கந்தர் அனுபூதியில். என்ன சொல்கிறார்?

'சிங்கார மடந்தையர் தீ நெறி போய்
மங்கா மலெனக் குருவரந் தருவாய்
சங்கராம சிகா வல சண்முகனே
கங்காநதி பாலக்ரு பாகரனே!'

இரண்டு பேருமே ஒருவருக்கொருவர் அனுசரித்து ஆட்சி புரிந்து வந்தார்கள். ஆனால் எத்தனை நல்லவரானாலும் அவருக்குத் துர்போதனை செய்ய ஆள் இருப்பார்தானே? (''பையன்களா, கைகேசியின் மனசைக் கெடுத்தது யார்?''. ''கூனி! கூனி!'' ''இந்தாருங்கள்!'' புத்தகத்தை வீசி எறிகிறார்) முருகன் கிருபை என்ற பெயரில் அடியேன் ஒரு புத்தகம் எழுதியிருக்கிறேன். அம்பது பைசா. இங்கிருந்து ஒன்பதாம் எண் பஸ்ஸில் வீட்டுக்குப் போக எத்தனை சார்ஜ்? அறுபதா? அதுவும் டிக்கெட்டாகப் போய் விடும். ஆனால் இப்புத்தகம் அப்படி இல்லை. உயிருக்கும் உடலுக்கும் தெம்பு தரும் மருந்து.

(குரலை உயர்த்தி) ஆ.... அருணகிரிநாதர் பெண்களைத் தாயாகப் போற்றுபவர். நம் ராமச்சந்திரனும் அப்படித்தான். பெண் குலத்தைக் கண்ணே போல் போற்றுபவர். அப்படி இருந்தும் அவருக்கு — அவர் பதவிக்கு — குழிதோண்ட இங்குள்ள சிலர் டெல்லிக்குச் சென்று வருகிறார்கள். கருணை மிகப் பெற்றவர் அவர். நான் ஒண்ணும் சொல்லலை! (குலுங்கச் சிரிக்கிறார்) அவர் பேச்சைக் கேட்டு டெல்லியிலிருந்து தூதர் போல ஒருத்தரை அனுப்பினார். தூதன் என்றால் எப்படி இருக்க வேண்டும்? தூதனுக்குத் தனியாகச் சில லட்சணங்கள், குணங்கள் உண்டு. உண்மையான தூதன் ஹனுமான் மாதிரி இருக்க வேண்டும். தூதர்களைப் பற்றிக் கம்பர், விபீஷணர் மூலமாக அழகாகச் சொல்கிறார் பாருங்கள்—

பகைப் புலன் அணுகி யுய்த்தார்.
பகர்ந்தது பகர்ந்து பற்றார்
மிகைப் புலன் அடக்கி, மெய்ம்மை
விளம்புதல் விரதப்—

ஆனால் அம்மையார் அனுப்பிய தூதரோ மேலே சொன்ன தகுதிக்கு நேர் மாறானவர்! (''பெயர் என்ன?'' ''மக்வானா'') மக்வானாவோ மாக்வானாவோ — செக்கு மாடு மாதிரி திரும்பித் திரும்பி ஒரே பழியை அவர் ராமச்சந்திரன் மீது சுமத்துகிறார். ஆனாலும் என்ன? இதை விடப் பல சோதனைகளைக் கண்டவராயிற்றே! பதினாலு வருஷம் ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி வனவாசம் அனுபவித்தது மாதிரி, நம்மவரும் 67லிருந்து ஏகப்பட்ட சோதனைகள், தடங்கல்கள், இவற்றைச் சந்தித்து வெற்றி கண்டவராயிற்றே... எனவேதான் நிச்சயமாகச் சொல்கிறேன்... ராமச்சந்திரன் போனால் எம். ஜி. ஆர். வருவார்! எம். ஜி. ஆர். போனால் பொன்மனச் செம்மல் வருவார்!

அருணகிரிநாதர் பல வருஷங்களுக்கு முன்பே இதைத்தான் சொல்கிறார்: 'அவர் போய் இவராய், இவர் போய் அவராய்—'

— ஈஸ்வர் குமார்

# அரசியல் உபன்யாசம்




காங்கிரஸ் மாநில அரசுகள்
வேலை நிறுத்தத் தடை அவசரச் சட்டம்
மற்ற மாநில அரசுகள்
அவுங்க கெட்டிக்காரங்க! ஜன்னல் கண்ணாடி உடையாம பார்த்து ஆடுவாங்க!.. இந்த எம்.ஜி.ஆர். தான்.. யார் மண்டை உடையுதோ.. எத்தனை ஜன்னல் நொறுங்குதோ?
உங்க குழந்தை பண்ற அக்கிரமத்தைக் கண்டிச்சு அடக்கி வையுங்க!...
பிரிட்டனில் இனக் கலவரங்கள்
மார்கரெட் தாட்சர்
இந்திய அரசு
மகாராஷ்டிர அரசு
பம்பாய் நடைபாதை வாழ் தமிழர்கள்
மேலே விழுந்து பிடுங்கறதா நினைக்காதீங்க.. அம்மா விளையாடுது!.. அவ்வளவு தான்! தேர்தல் வரை நம்ம வீட்டோடு இருந்த நாய் தானே!..
அஞ்சையா
ஆந்திர மக்கள்

# அவசரச் சட்டம் அவசியமே!

ஒரு ஜனநாயகத்தில் தொழிலாளர்களின் அடிப்படை உரிமைகளைப் பாதிக்கும் விதமாக, வேலை நிறுத்தங்களைத் தடை செய்து அவசரச் சட்டம் பிறப்பிப்பது நல்லது என்று யாருமே கூற மாட்டார்கள். ஆனால்...

இந்த அவசரச் சட்டம் முன் யோசனை இன்றி அவசரமாகப் பிறப்பிக்கப் பட்ட சட்டமாகத் தோன்றவில்லை. இந்த அவசரச் சட்டத்தை அரசு பிறப்பித்தது என்று கூறுவதைவிட தொழிற்சங்கத் தலைவர்கள் பலர் தங்களுடைய தகாத போக்கினால் தருவித்துக் கொண்டார்கள் என்பது பொருந்தும்.

உம்மென்றால் ஆர்ப்பாட்டம் ஏனென்றால் வேலை நிறுத்தம் என்ற பாணியில் பல தொழிற் சங்கத் தலைவர்கள் தொழிலாளர்களைத் தூண்டி விட்டபடி உள்ளனர்.

பெங்களூரில் அரசுத்துறை நிறுவனங்கள் நடத்திய நீண்ட கால வேலை நிறுத்தம் தோல்வியுற்றது. தேசத்துக்கு 150 கோடி ரூபாய் நஷ்டம். பின்னி வேலை நிறுத்தம் வெற்றி பெற்றதாகக் கூற முடியாது. தொழிலாளர்கள் பட்ட அவதி சொல்லி மாளாது. பாங்கு, எல்.ஐ.ஸி. ஊழியர்கள் அடிக்கடி வேலை நிறுத்தம் செய்து மக்களிடம் அனுதாபத்தையும் மதிப்பையும் இழந்து விட்டனர் என்றால் மிகையில்லை. இன்னும் எத்தனை எத்தனையோ!

இந்தச் சூழலில் எட்டு பெரிய தொழிற் சங்கங்கள் ஒன்று கூடி தேசிய போராட்டக் குழு அமைத்து நாடு தழுவிய அளவில் கிளர்ச்சி நடத்தப் போவதாய் அச்சுறுத்தி அறிக்கை விட்டன. இதை முறியடிக்காது போனால் ஏற்கெனவே பலவீனமான தேசத்தின் பொருளாதாரம் பிராணனையே விட்டு விடக் கூடிய அபாயம் இருந்தது. எனவே போதிய ஆலோசனைக்குப் பிறகு இந்த அவசரச் சட்டம் அவசர புத்தியுடன் அல்லாமல் நிதான புத்தியுடன் பிறப்பிக்கப் பட்டிருக்கிறது.

தேசப் பொருளாதாரம் சீர் கெட்டிருக்கும் இந்த நேரத்தில், நாட்டைப் போர் மேகங்கள் சூழ்ந்திருக்கும் வேளையில் நமது தொழிலாளர்கள் பொறுப்புணர்ந்து செயல்பட்டு எல்லாத் துறைகளிலும் உற்பத்தியைப் பெருக்க வேண்டும்.

'பொருளாதாரத்தை ஸ்திரப்படுத்துவது மட்டுமே நோக்கம்' என்றும் 'இது தாற்காலிகச் சட்டமே' என்றும் பிரதமர் உறுதி அளித்திருக்கிறார்.

இப்போது அரசாங்கம் அத்யாவசியத் துறைகளுக்கு மட்டுமே இந்தச் சட்டத்தை அமுல் படுத்தியுள்ளது. ஆனால் தனியார் துறைக்கும் இந்தச் சட்டத்தை விஸ்தரிப்பதுதான் நல்லது. பல தனியார் துறை நிறுவனங்களில் போட்டித் தொழிற் சங்கங்கள் இருப்பது காரணமாகப் பல தொந்தரவுகள் ஏற்பட்டு வேலைநிறுத்தத்தில் கொண்டுபோய் விடுகிறது. வடக்கே சில தொழிற் சங்கத் தலைவர்கள் அரசியல் லாபங்களுக்காக வேலைநிறுத்தம் என்ற ஆயுதத்தைக் காட்டி முதலாளிகளை மிரட்டிப் பணம் பறிக்கும் காரியங்களிலும் ஈடுபட்டு வருகின்றனர்.

தங்கக்கம்பிகளான தொழிலாளர்களும் சொக்கத்தங்கமான தொழிற் சங்கத் தலைவர்களும் பலர் உண்டு. எனினும் பொதுவாக நோக்குமிடத்து விசனத்துக்குரிய விதமாகவே நம் நாட்டில் தொழிற்சங்க நடவடிக்கைகள் வளர்ந்து வரு

1981 ஆகஸ்டு 9
துன்மதி ஆடி 25
மலர்: 40 இதழ்: 2



கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

கின்றன. தொழிலாளர்கள் தவறான பாதையில் அழைத்துச் செல்லப்படுகின்றனர்.

எஸ். எஸ். எல். ஸி. படித்துவிட்டு ஆயிரம் ரூபாய் சம்பாதிப்பவர் பலர் உண்டு. ஆனால் எத்தனையோ எம். ஏ.க்களும் டாக்டரேட் பெற்றவர்களும் வேலையில்லாமல் இருப்பதையும் பார்க்க முடிகிறது. இந்த நிலையில் தேசபக்தி உள்ள தொழிலாளி தனக்குக்கிடைக்கும் ஊதியத்தை விடவும் குறைவாகப் பெறுபவனை நினைத்து ஆறுதல் அடையவேண்டும்.

இந்த வேலை நிறுத்தத்தடைச் சட்டத்தைத் துஷ்பிரயோகம் செய்து தொழிலாளர்களைப் பழி வாங்கக்கூடாது; தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகள் உடனுக்குடன் ஏற்கப் படவேண்டும் என்பதை எவ்வளவு வலியுறுத்தினாலும் போதாது. அதே நேரத்தில், ''வேலை நிறுத்தம் செய்யத்துணிபவர்கள் இந்த அவசரச் சட்டத்தை மீறத்துணிய மாட்டார்களா?'' என்று கேட்டுப் போர்க்கொடி உயர்த்துவதை வன்மையாகக் கண்டிக்கவும் வேண்டியிருக்கிறது. இது தேசத் துரோகமான, அநீதியான, ஆபத்தான போக்கு. இதற்கு மாறாக, இத்தகைய சட்டத்துக்கு அவசியமே இல்லை என்று அரசு உணரும்படி தொழிலாளர்களும் தொழிற்சங்கத் தலைவர்களும் தங்கள் நடத்தையின் மூலம் நிரூபித்து, நியாயமான காரணங்களுக்கு வேலைநிறுத்தம் செய்யும் அடிப்படை உரிமையை விரைவில் திரும்பப் பெற முயலவேண்டும்.

'இந்தச் சட்டம் லாக் அவுட், லே ஆஃப் ஆகியவற்றையும் தடைசெய்கிறது' என்று பிரதமர் கூறியுள்ளதை வாஜ்பாயி மறுத்துள்ளார். எனினும் பிரதமரின் கருத்து என்ன என்பது தெளிவாகியிருப்பதால் அக்கருத்துப்படி சட்டத்தைத் திருத்துவதோ புதிய சட்டம் இயற்றுவதோ சாத்தியமே. தொழிலாளர்களுக்கு இதன் மூலம் பாதுகாப்பு கிடைக்கும்.

# எங்கள் (துர்) பாக்கிய நகரம்

எங்கள் ஊருக்கு—ஆந்திரத் தலைநகருக்கு 'பாக்கிய நகர்' என்று அழகான ஒரு பெயர் உண்டு. அந்த பாக்கிய நகரம் சென்ற மாதம் துர்பாக்கிய நகரமாகி இருக்கும் வரலாற்றுப் பெருமையைப் பெற்றது.

காலம் காலமாக இந்துக்களும் முஸ்லிம்களும் ஏறக்குறைய சம அளவில் வாழ்ந்து வரும் இங்கு மத சம்பந்தப்பட்ட சண்டைகள் அமளிகள் எல்லாம் சர்வ சாதாரணமாகி விட்டன. கோவிலைப் பார்த்தால் முஸ்லிம்களுக்கு அருவை... மசூதிகள் என்றால் இந்துக்களுக்கு ஆத்திரம். எம்மதமும் சம்மதம், ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பதெல்லாம் பள்ளிப் பாடப் புத்தகத்தில்தான். நீறு பூத்த நெருப்பாக உறங்கிக் கொண்டிருக்கும் இந்த மதத் துவேஷம், சில்விஷமங்கள் சற்றே இடம் பெற்றால் போதும்... விசிறப்பட்ட தணலாகக் கொழுந்து விட்டெரியத் தொடங்கிவிடுகிறது.

பண்டிகைகள் வருடம் தோறும் தவறாமல் இடம் பெறுவது போல் இந்தக் கலவரங்களும் வருடா வருடம் நிகழ்கின்றன. இந்த ஆண்டும் 'இதோ வந்து விட்டேன்' எனக் கடந்த சில நாட்களாகப் பயமுறுத்திக் கொண்டிருந்து, கடைசியில் வந்தே விட்டது. எதற்கும் ஒரு காரணம் வேண்டுமல்லவா?

நம்மூரில் ஆடி மாதத்தில் அம்மன் திருவிழாக்கள் நடைபெறுவது போல் இந்தத் தெலுங்கானாப் பிரதேசங்களில் ஆனி முடிவில் தொடங்கி ஆடி இறுதிவரை 'போனாலு' என்ற பெயரில் அம்மன் பண்டிகைகள் நடைபெறும். அப்போது ஊர்வலங்களும் உண்டு. ஜூலை 12 அன்று இதுபோல் ஒரு சின்ன ஊர்வலம் வழக்கமான வாத்தியங்களுடன் தெருவில் சென்றபோது மசூதி ஒன்றைக் கடக்க நேரிட.... அச்சமயம் வாத்தியங்கள் வாசிப்பதை நிறுத்துமாறு அந்த மதத்தைச் சேர்ந்த சிலர் ஆணையிட.... இவர்கள் மறுக்க.. சங்கிலித் தொடராக வாக்குவாதம், அடிதடி, கல்லெறிதல் இப்படி ஆரம்பித்த கலவரம் கான்கார்ட் வேகத்தில் மற்ற பகுதிகளுக்கும் பரவி ஊரடங்குச் சட்டம் வரை வந்து விட்டது. இந்தக் கலவரத்தின் விளைவு தினமும் பத்து இருபது என நூற்றுக் கணக்கானவர் காயங்களுடன் ஜீவ மரணப் போராட்டம்... தயை தாட்சண்யமின்றிக் கத்திக் குத்து... நகரின் மருத்துவ மனைகளில் இடமில்லாத தவிப்பு... இரத்த தானம் வேண்டிப் பத்திரிகைகளில் ரேடியோவில்... டி. வி.யில் வேண்டுகோள்... மற்ற ஊர்களில் உற்றார் உறவினர் இறந்துபோனதாகக் கொடுத்த தந்திகள் ஊரடங்குச் சட்டம் காரணமாக உரியவர்களைச் சேர முடியாமல் ரேடியோ, டி. வி.யில் அறிவிக்கப்படும் அவலம். இருபத்தைந்து பேருக்கு மேல் மரணம் என அதிகாரபூர்வமான அறிவிப்பு.

ஊரடங்குச் சட்டம் அமலில் இருக்கும் நேரங்களில் நகரின் காட்சி சோக காவியம்.

கதவுகள் அடைக்கப்பட்ட வீடுகள்.. ஜன்னல் துவாரம் வழியே வெளியே என்ன நடக்கிறதோ என்று ஆர்வத்துடன் தெருவை எட்டிப் பார்க்கும் பயம் கலந்த விழிகள்... ஊசி போட்டால் கூட மிகத் துல்லியமாகக் கேட்கும் அளவுக்கு நிசப்த சூழ்நிலையில் டக் டக் எனக் காக்கி உடை அணிந்த கடமை வீரர்களின் காலணி ஒலிகள்... தெருக்கள் சுத்தமாகக் காலியாகி ஊரே வெறிச்சோடி ஒரு மயான பூமி போல் அமைதி காக்க ... பொருத்தமாக ஓரிரு நாய்களின் நடமாட்டம்...

ஊரடங்குச் சட்டம் தளர்த்தப்படும் ஒரு நாளின் இரண்டு மணி நேரங்களில் நகரின் கோலத்தைப் பார்க்க வேண்டுமே.. ஊர் மொத்தம் தெருக்களில் திரண்டு விடும். அத்தனை நேர நிசப்தத்துக்கு ஈடு செய்வது போல் ஒரே இரைச்சல்... ஆரவாரம்... அங்குமிங்கும் மக்களின் ஓட்டம் ... அவசரம்! அந்த இரண்டு மணி நேரத்துக்குள் தேவையான பொருட்களை வாங்கிக் கொண்டு திரும்பவும் வீடுகளில் முடங்கிக் கொள்ள வேண்டுமே!

வியாபாரிகளுக்குக் கொண்டாட்டம். அது தான் சந்தர்ப்பம். பயங்கரமாக விலை ஏற்றி...



ஒரு முட்டை ஒரு ரூபாய் ... மட்டன் கிலோ இருபத்தைந்து ரூபாய்... மட்ட ரக அரிசி கிலோ ஐந்து ரூபாய்... உருளைக் கிழங்கு எட்டு ரூபாய். தக்காளி பதினாறு ரூபாய். எத்தனையானாலும் கொட்டிக் கொடுத்து வாங்க அப்பாவி மக்கள் தயாராக இருக்கும்போது ஏன் கொள்ளையடிக்க மாட்டார்கள்? அந்த இரண்டு மணி நேரம் முடிவுற்றதும் கலகலத்த அந்தத் தெருக்களைப் பார்த்தால்... எதிர்ப் பதம் என்ற சொல்லுக்கு அதைவிட வேறு எந்த விதத்திலும் சரியான விளக்கம் இருக்க முடியாது..... பயங்கர அமைதி!

அந்தச் செயற்கை அமைதியன்றி இயற்கையான அமைதி எந்த நேரமும் எப்போதும் நிலவும் பாக்கியத்தை இந்த 'பாக்கிய நகரம்' என்று பெறுமோ? தற்காலிகமாக வேண்டுமானால் இப்போது மூண்ட கலவரம் அடங்கலாம். ஆனால் இந்துவோ முஸ்லிமோ இறைவன் படைப்பில் இருவரும் சமம், இருவர் உடலிலும் ஓடுவது சிகப்பு ரத்தமே என்று சிந்தித்துணரும் பக்குவம் பெற்றால் ஒழிய, இப்படிப்பட்ட சமயப் பூசல்கள், வகுப்புக் கலவரங்கள் மீண்டும் மீண்டும் ஏற்பட்டுக் கொண்டுதானிருக்கும்.

— சாந்தா தத்

"பத்திரிகை ஆசிரியரான என் மாமா வீட்டிற்கு என் மனைவியை அனுப்பியது தப்பா போச்சு...."

"என்ன ஆச்சு....?

"திருப்பிஅனுப்பப்போதிய ரயில் கட்டணம் அனுப்புங்கள்னு எழுதியிருக்கார்...."

– சுதா சிவாஜி



அவர்: "என்னை ஒரு ரௌடி பதினேழு அடி அடிச்சுட்டான்!"

இவர்: "அதுவரைக்கும் நீ சும்மாவாயிருந்தே?"

அவர்: "இல்லியே, எண்ணிக்கிட்டிருந்தேன்!"

– ஜி. சுந்தரராஜன்



# வாக்குறுதி வீரர்கள்!



தேர்தல் சமயத்தில் பொய்யான வாக்குறுதிகளை அள்ளி வீசும் அரசியல் வாதிகளைத் தண்டிப்பதில் நார்வே நாடு ஒரு அபூர்வமான முன்னுதாரணத்தை ஏற்படுத்தியுள்ளது. 1977 தேர்தலின் போது தொழில்துறை அமைச்சர் அரசாங்கத்திற்குச் சொந்தமான நால் ஆலைகளில் வேலை நீக்கமிருக்காது என்று வாக்குறுதி அளித்தார். 1979 ஆம் ஆண்டு சிலர் வேலை நீக்கம் செய்யப்பட்டனர். அதில் மூவர் வாக்குறுதியை மீறியதற்காக அரசாங்கத்தின் மீது வழக்கு தொடுத்தனர். அவர்கள் வேலை நீக்கம் செய்யப்படாமலிருந்தால் ஓய்வு பெறும் வரை பெறக்கூடிய ஊதியத்தை அளிக்குமாறு உயர் நீதி மன்றம் தீர்ப்பளித்திருப்பதாக 'எகானமிஸ்டு' பத்திரிகை கூறுகிறது. இந்திய வாக்காளர்களும் இது போல் செய்ய ஆரம்பித்தால் நமது அரசியல் வாதிகளும் நிறைவேற்ற முடியாத வாக்குறுதிகளைத் தேர்தல் சமயத்தில் அளிப்பதில் கவனமாக இருப்பார்களே?

நன்றி: ஆன்லுக்கர்

தகவல்: ஐயா கோகுல்

"என்னை உனக்குப் பிடிச்சிருக்கா?"

"இப்பத்தான் கேட்கிறதா?"

பக்கத்து அறையில் உரத்துக் கேட்டுக் கொண்டிருந்த ஆங்கிலச் செய்தி நிறுத்தப் படவே, சட்டென விரிந்த நிசப்தத்தில் அவள் குரல் துல்லியமாகக் கேட்டது.

"பின்னே, எப்பக் கேட்கணுமாம்? நாளைக்கா இல்லை...." கொஞ்சம் தயக்கமும் வெட்கமும், குறும்பும் கொஞ்சம் தூக்கினாற் போல் தென்பட்ட அசட்டுச் சிரிப்புமாகக் கேட்டான். "இன்னிக்குப் பன்னிரண்டு மணிக்கா?"

"இல்லே. ஒரு மாசம் முன்னாலே. பொண்ணு பார்க்கிறேன் பேர்வழின்னு குலாப்ஜாமூனும் ஓமப்பொடியுமா நொறுக் கிட்டு, நுரையை ஊதி ஊதித் தள்ளி காப்பி யைக் குடிச்சிட்டு, உங்கப்பா 'சரி'ன்னவுடன் தைரியமா உன்னை எட்டிப் பார்த்தீங்களே... அப்போ." பிசிறில்லாமல் பேசிய அவளின் புத்திசாலித்தனம் சட்டென உறைத்தது.

"அப்பமன்னு, என்னை... உனக்கு...?"

"வேற 'சாய்ஸ்' இல்லே. உங்களை மாதிரி. நீங்கள் நாலைஞ்சு பெண்களைப் பார்க்கல்லே?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. எந்த மடக் கழுதை சொன்...."

"உங்கம்மா."

'கப்'பென்று 'சிப்'பானான்.

"எங்கப்பா பார்த்ததுலே படிப்பு, வேலை, ஜாதகம்னு பொருந்தி வந்தது, உங்க ஒருத்த ருடையதுதான்."

"அப்போ நான்தான் உன்னை விரும்பி யிருக்கேன்... அத்தனை பெண்கள் நடுவே. ஆனா நீ அப்படி இல்லே..." – அவளை மிஞ்சி விடவேண்டும் என்கிற ஆவேசம் வாதாட, முன்னேறினான்.

அவன் மார்பில் இழைந்த தன் முகத்தைச் சட்டென உயர்த்தி அவள் கூறினாள்.,

"உறவு முறைகளிலே எதையும் நாமா விரும்பித் தேர்ந்தெடுக்கிறது இல்லே—இந்த உறவைத் தவிர. ஆனா கடவுள் ஏற்படுத்தித் தந்த உறவுகளை யெல்லாம் ரொம்பச் சுலபமா உதற முடியுற நமக்கு, இந்த ஒரு உறவுதான் சாகவரமாத் தோன்றது. இதுக்கு அடிப் படைக் காரணம்..."

"புரியுது சாலினி... போறுமே உன் பேச்சு." அவன் அவசரப்பட்டான்.

"நாம ஏன் 'அதை' இரண்டாம் பட்ச மாக்கிட்டு, சகஜமான ஒரு மன நெருக் கத்தை முதல்லே வளர்த்துக் கொள்ளக் கூடாது?"

அவன் உறுத்துப் பார்த்தான். "நான் நாலைந்து பெண்களைப் பார்த்ததுக்கும், அப் படிப் பையன்களை உன்னாலே பார்க்க முடி யாததுக்குமாக இப்ப என்னைப் பழி தீக் கறையா?" நிறுத்திக் கேட்டான்.

"உங்களைப் பழிதீர்க்கறதா?... பார்த்தீங் களா... அப்ப 'செக்ஸ்'னு உங்களுக்கு மட் டும்னுதான்னு நினைக்கிறீங்க. எனக்கும் அதில் பாதிப் பங்குண்டுன்னு தோணலையா?"

"சட்". உதறிவிட்டு எழுந்தான் முரளி. "வாட் நான்ஸென்ஸ்".

"இட் இஸ் ஸென்ஸ். இது ஒரு முயற்சி தான். ஆனா..."

"ஆனா, உன் மனசு மாறச்சேதான் கை விடுவே இல்லையா? அதுக்காக நான் நாக்கைத் தொங்கப் போட்டு நாயாட்டம் காத்துண்டு இருக்கணும் இல்லையா? இதான்... இதுக்குத் தான்,பொட்டைப் பசங்களை நாலெழுத்துக்கு மேலே படிக்க வைக்கக் கூடாதுங்கறது. கொஞ்சம் தன்னைச் சுற்றிப் பார்க்கத் தெரிஞ் சுட்டா, ஏதோ ரொம்ப... ன்னு நினைச்சுக் கறது... மத்தவாளைத் தூசியா ட்ரீட் பண் றது..."

"அப்படிப் பண்ண ஆம்பிளைகளுக்கு மட் டும்தான் உரிமை இருக்கணுமா?"

பதில் பேசாமல் 'ஷர்ட்டை' எடுத்து மாட்டி, தலை சீவி, செருப்பை மாட்டினான். மேஜை மேலிருந்த திரட்டுப் பால் கிண் ணத்தை மெத்தை மேல் வீசிவிட்டு, பர்ஸை உருவிக் கொண்டான்.

"எங்கே கிளம்பறாப் போல?"

"மனசு சரியில்லை. நைட் ஷோ."

"எனக்கும்தான். நானும் வரேன்."

தலையில் கையை வைத்து அழுத்திக்கொண் டான் முரளி.

தபால்காரர் முதல் பால்யத்தோழர்கள் வரை சொல்லிச் செய்த கேலிப் பேச்சுக்களை அசட்டுச் சிரிப்போடு வரவில் வைத்தான். லீவு கிடந் தது இன்னும் இருபது நாட்களுக்கு.

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

# மாறாத பரிணாமங்கள்

உஷாதேவி



''ஏண்டா முரளி, இந்தக் காவேரிக் கரையிலே இன்னும் கொஞ்ச நாள் இருக்கட்டுமே சாலினி! 'ஹனிமூன்'போகப் போறையோ?''

அம்மாவின் ஆதங்கம். ''சரிதான்'' என்றான். – 'ஹனிமூன்' போகிற மூஞ்சியைப் பார்க்கலே!' கொஞ்ச நாள் இந்த மனிதர்கள் நடுவே இருந்துவிட்டுப் போனாலே நல்லது தான்.'

சாலினி புத்திசாலி. அவள் முன்னே உடம்பு முறுக்கேறினாலும் அறிவு தோற்றுப் போகிறது. அழகும், அறிவுமாக இணைந்த அந்த அபூர்வ வஸ்து தனக்குக் கிடைத்துவிட்டதில் பெருமை கரை புரண்டாலும், அதை ஆதிக்கம் செய்வதில் தான் கண்ட மகத்தான தோல்வி!...

–சாலினி தன்னைவிடப் புத்திசாலி. அவனுள் புகைந்தது.

''கட்டின புடைவையோடு குளிச்சா, இங்கெல்லாம் கேலி செய்வாளோ!''

–தலையை உதப்பி, வழிந்த நீரை வாயால் ஊதியவாறு கண்களைத் திறந்தான் முரளி.

அருகில் சோப்புப் பெட்டி, பிளாஸ்டிக் குவளை, மடித்துப் போட்ட வாக்கில் ஒரு டர்கிஷ் டவல், புதுப் புடவை, பெட்டிகோட் வகையறா... போதாக் குறைக்கு, கரையில் கழற்றிப் போட்ட செருப்பு ஜதை.

சிரித்தான்.

''பேஷா. இப்ப காவேரிக்கு நீ செருப்போட வந்த தற்கே வழி முழுக்கச் சிரிச்சிருப்பா.''

ஒன்றும் புரியாமல் அவள் நிற்பதைப் பார்க்கவே அவனுக்கு ஆனந்தமாக இருந்தது.

''அய்....யோ. கால்ல என்னவோ குறு குறுங்கறது.'' பரபரத்து அவள் குனியப் போய், நிலை தடுமாற, கையிலிருந்த சோப்புப் பெட்டி முதலான சமாசாரங்கள் நழுவிக் காவேரியில் ஸ்நானம் செய்ய,

சட்டென் இரும்புப் பிடியாக புஜத்தைப் பற்றி நிறுத்தினான்.

''மீன் கால்ல இருக்கிற அழுக்கைக் கவ்வும், வேறே ஒண்ணுமில்லே. அது சரி, குளிச்சு, இங்கேயே டிரஸ் மாத்தலாம்னு வந்தியா...'' வாய் விட்டுச் சிரித்த அவனைக் கண்கொட்டாமல் அவள் பார்த்திருக்க, தண்ணீரோடு போக ஆரம்பித்தவைகளை ஒரே தாவலில் சேகரித்து வந்தான்.

''நீங்க நீஞ்சுவீங்களா என்ன?''

அவளின் ஆச்சரியத்தை அசட்டை செய்தான்.

''அம்மா அறிவுஜீவி! உன் சட்டையையெல்லாம் கருட்டி வெச்சு, புடவையைப் பாந்தமா சுத்திண்டு குளிச்சிட்டு வா. வீட்ல வந்து உலர்ந்த துணி மாத்திக்கலாம்.''

''ஐய, தெருவிலே அப்படியேவா ஈரமாப் போறது?''

''ஹுய்! உனக்கு முன்னாலே லட்சம் பேரு அப்படிப் போன தெரு இது. ஆயிரம் பேரு இப்பப் போறா, உன்னை யாரு சட்டை பண்ணப் போறா?''



வலது கையில் அடங்கிய இடுப்பை அழுத்தி அடிக் குரலில் கூறினன். ''முதல்ல உன் 'ஸெல்ப் கான்ஷியஸ்னெஸ்'ஸை விட்டு ஒழி. வெளியிலேயும், வீட்டிலும், 'ரூமு'க்கு உள்ளேயும்....''

நீரில் மூங்கப் பயந்து, முகத்தில் தேய்த்த சோப்பைக் குவளையில் முகந்த நீரால் கழுவிக் கொண்டிருந்தாள் சாலினி. புடவைக் கொசுவம் நீரில் கனத்துக் காலைத் தடுக்க உடைகள் உடலோடு பதிய....

அவன் சுவாரஸ்யமாக ரசித்துக் கொண்டிருந்தான்.

''ஈரக் கால்ல செருப்பு போட்டா மண் உறுத்தறது. கையிலே எடுத்துக்கறேன். நீங்க இதையெல்லாம் பிடியுங்க.''

கையில் வைக்கப்பட்ட சோப்புப் பெட்டி, குவளை, புடவை, நனைந்த உள் பாவாடை....

'தட்'டென மண்ணில் கைவிட்டான்.

''என்னை வேணும்னே சீண்டி விடறே நீ.'' திரும்பிப் பார்க்காமல் விடு விடுவென்று வீட்டைப் பார்க்க முன்னேறினன்.

''**கா**விரிக்குப் புதுசு, பாவம், சாலினியை விட்டுட்டு நீ உன்பாட்டுக்குவந்துட்டயாமே?''

அம்மா தந்த காப்பியைச் சுவைத்துக் கொண்டே, ''என்னதான் சொல்லு. நம்ம பசுவோட பால் ருசியே தனிதாம்மா'' என்றான்.

''சட்டையும் பாடியும் எப்படி உடம்போட ஒட்டிப் போயிருக்கு பாரு. அவிழ்க்க முடியாமெ. குளிக்கப் போனவ என்னைக் கேட்கப்படாதா?... நீ ஒண்ணும் நினைக்காதே சாலி, முரளிக்கு வெட்கமா இருந்திருக்கும். தனியா வந்துட்டான். என் பிள்ளை சாது'' — சமையல்கட்டில் அம்மாவின் குரல் கேட்டது.

''அப்படி யெல்லாம் சாதுவா இருக்கக் கூடாதும்மா'' என்ற பதிலும் கேட்டது.

கொஞ்சம் ரசிப்போடு கூடவே, 'இவன் குயுக்திப் பேச்செல்லாம் அப்பிராணியான அம்மாவிடம்தான் காட்டணுமோ' என்கிற எரிச்சலும் எழுந்தது முரளியிடம்.

**பு**றக்கடைக் கோடியில் ஓரமாகக் கிணறு. சுற்றிலும் வாழை, கீரை, கத்தரி என்று பசுமைப் பட்டாளம். அதன் கரையாகக் கனகாம்பர வரிசை. பந்தல் கொள்ளாமல் 'சென்ட்' அடித்துக் கொண்டு முல்லையும் ஜாதியும்.

விடிந்தும் விடியாத அந்தக் காலை நேரத்தில் எல்லாமே அப்போதுதான் பிறந்து கொண்டிருக்கும் புதுமையில் கொஞ்சம் கொஞ்சமாக உருப்பெற ஆரம்பிக்க, கிணறு வரை வந்த முரளி, சூழ்ந்திருந்த இயற்கையின் ஓர் அங்கமே போலக் குளித்து, செண்டாகக் கட்டிய ஜாதி, முல்லையை நாலாக மடித்துத் தோள் வரை புரளச் சுமக்கும் தலைப் பின்னலுடன், தண்ணீர் சேந்திக் கொண்டிருந்த அவளைப் பார்த்தான்.

''பேஸ்ட் எங்கே?''

ஒற்றை விரல் சுட்டிக் காட்டியது.

'டூத் பிரஷ்'ஷை நீட்டினன்.

''ஊஹூம்.''

அவனுக்குள் உறுமிற்று.

''போய் என் 'ஷேவிங் ஸெட்'டைக் கொண்டு வா.'' அந்த அழகிய பின்புறத்தை நோக்கிக் கூறினன்.

''வெள்ளிக் கிழமை. புரட்டாசி மாசப் பிறப்பு. உங் கையாலே பாயசத்தை நைவேத்யம் பண்ணி எல்லோருக்குமா கொடு சாலி.''

''சரிம்மா'' தலையாட்டிவிட்டு ஷேவிங் செட்டுக்காக விரைந்த அவளை மாமியாரின் குரல் இழுத்தது. ''உன் கையாலே பாயசம் சாப்பிட்ட பிறகுதான் எங்களுக்குக் காப்பி இன்னிக்கு.''

—ஐயோ பாவமே, தூங்கி எழுந்து இத்தனை நேரம் வெறும் வயிற்றோடு காத்திருக்கிறார்களா என்ன!—

செக்ஸ் இருந்துவிட்டால் மட்டும் படம் ஓடிவிடுமா? கிடையாது. சில உதாரணங்கள்: 'ஹம் தேரே ஆஷிக் ஹைன்' படத்தில் ஹேமமாலினியின் தொடைகள் காட்டப்பட்டன. ஆனால் அந்தப் படம் படுதோல்வி அடைந்தது!



ஷாலிமார், சத்யம் சிவம் சுந்தரம் படங்களில் ஜீனத் அமன் தன் மார்பகங்களை நன்றாகவே காட்டினார். இரண்டுமே படு தோல்வியடைந்தன!

'லாஹூகே தோரங்' படத்தில் ஷபனு ஆஸ்மி குளிக்கும் காட்சி வந்தது. பிரயோஜனம்?! ஸீரோதான்!

'கீமத்', 'ப்ரான் ஜாயே ஃபிர் வசன்ந ஜாயே' படங்களில் ரேகா செக்ஸியாக நடித்தார். அந்தப் படங்கள் வெற்றிபெறவில்லை. ஆனால் அதே ரேகா அடக்கமான உடையில் தோன்றிய 'கூப் சூரத்' படம் பெரும் வெற்றி பெற்றது.

ஜயா பாதுரி எந்தப் படத்திலும் செக்ஸியாக நடிக்கவில்லை. ஆனால் அவர் நடித்த பல படங்கள் பிரமாதமாக ஓடின!

('பிலிம் மிரர்' கடிதம்)
அனிதா ராமச்சந்திரன்

மடமடவென்று ஊதுவத்தியைக் கொளுத்தி வைத்து, நெய்யைத் தெளித்து, பாயசத்தைக் கொண்டு வைத்து, கற்பூரம் கொளுத்தி, பூவைத் தூவி, நீரைச் சுற்றி...

அவன் உலுக்கிய உலுக்கலில் அலமலந்து போனாள். ''கேட்டுட்டு புழக்கடைக் கோடியிலே நானிருக்கறேன். நீ இங்க, உன் பாட்டுக்குச் சாவகாசமா... என்ன அர்த்தம்?''

அவனுள் வெடித்தது.

பளாரென்று தாங்கிக் கொண்ட இடக் கன்னத்தைப் பொத்தியவாறு நின்றாள். ஒரே கணம்தான். பாயசம் வார்த்த கிண்ணங்களைப் பெரியவர்களிடம் கொடுத்து, சரசர வென சர்ப்பமாய் நழுவிப் போனாள்.

நாடகத்தைப் பார்த்த அம்மா, 'இதன் உள்ளீடாக வேறு ஏதோ அர்த்தங்கள் இருக்கிற'தை உணர்ந்தாள். ஐந்து நிமிஷத்தில் முரளியைப் பிடித்தாள்.

''இந்தா முரளி, வெள்ளிக் கிழமை. மாசப் பிறப்பு. சாலினி கையால் பாயசம் சாப்பிட்டு விட்டுத்தான் வேறெதுவும்னு... இந்தா குடி. கொஞ்சம் பொறுத்துக் காப்பி குடுக்கச் சொல்றேன். எங்கே அவ?....''

எந்தச் சாயலும் காட்டாமல் திரும்பினான்.

கையை நீட்டி நடுவீட்டில் அடித்தது அவனுக்கு வலித்தது இப்போது.

'சே! என் வீக்னெஸை எப்படிக் காட்டிக் கொண்டு விட்டேன்! இனிமேல் அவ மதிப்பிலே நான் பூஜ்யம்தான்.'

அப்பா வாசலில் ஹிந்துவைப் புடம்போட, அம்மா சமையல் உள்ளில் மூழ்கியிருக்க, விடுபட்டு மாடிப் படி ஏறினான். கடைசிப் படியில் கால் 'பிரேக்' போட்டது. குளிர்ந்திருந்த அந்த மொட்டை மாடியின் விசாலத்தில் லேசான வெய்யில், கைப்பிடிச் சுவர் ஓரமாய் விரித்திருந்த நீண்ட நிழல் பாயில் நீட்டிக் குப்புறப் படுத்திருந்தாள் சாலினி.

தலைக்கு மேலாக ஒரு கை நீண்டு சலித்திருக்க, பரந்து கிடந்த புடவைக் கசங்கலில் புதுக் குளியலின் சந்தன மணமும், புதுப் பூவின் வெண்மையும், வாசனையும் கலித்திருக்க, கலைந்த கருங் கூந்தலும்...

மனம் கனிந்து போனது. இந்த ஒரு மாதப் பழக்கத்தில், அவள் கூறினபடியே ஏற்பட்டுவிட்ட நெருக்கம் உறைத்தது. பக்கத்தில் மண்டியிட்டு, உச்சம் தலையிலிருந்து பாதம் வரையில் கையை ஓட்டியபோது சிலிர்த்துக் கொண்டான். காலைக் குளிரில் உடல் 'குப்'பெனச் சூடேறி, வியர்த்தபோது, லேசான விசும்பலில் உந்தப்பட்ட அந்த முதுகின் வளைவு அவனை என்னென்னவோ செய்தது.

அவளிடம் மன்னிப்புக் கேட்க நினைத்தான்.

தன் அன்பை எடுத்துச் சொல்ல வார்த்தைகள் தேடினான்.

தங்கள் இருவர்பாலும் எழுந்த பச்சாத்தாபத்தை உணர்த்த விரும்பினான்.

அவள் 'தியரி' சரிதான் எனத் தன் தோல்வியை ஒப்புக்கொள்ளவும் தயாரானான்.

ஆனால், பேச்சும், பேதமும், பெயரும் உறவும், உறவுகளின் அர்த்தங்களும், அனர்த்தங்களும், தோல்வியும், வெற்றியும் ஆக, எல்லாமே பொருளற்றுப் போன ஒரு பொருள் நிறைந்த நிமிஷத்தையே உருவாக்க முடிந்தது அங்கே, அவனால்.

வேலைகளைமுடித்து, சாவகாசமாகத் தன் புடவையைக் காயப்போட மாடியேறி வந்த அம்மா, வெய்யிலில் பழுத்துக் கொண்டிருந்த வெள்ளைப் பூக்குவியலைப் பார்த்தாள். ஈரக் காற்று ஏதோ கிசுகிசுத்தது.

கொசுவிய புடவையும் கையுமாக அங்கேயே அமர்ந்து, ஒருவித வாத்சல்யத்தோடு அந்தக் காரைத் தரையை நீவி விடுவது போலக் கையால் தடவி விட்டாள். இதன் மேல் எத்தனை தடவை இப்படிப் பூக்கள் நிறைந்திருக்கும்! ஒரு இடைவெளி, ஒரு தட்டுப்பாடு இல்லாத எத்தனை பரம்பரைகள் இதன் மேல் மனசு ஆறி இருக்கும்! நிரந்தரமான மனுஷ்யத்துக்கு ஒரு சாட்சியா இது! பெண் நிமிரும் போது ஒடுங்கிப்போய், அவளாக அடங்கும் பாவனைகளை அப்பட்டமாய் நம்பி, குழந்தையாகிப்போய், அந்த நம்பிக்கை தந்த போலி அதிகாரத்தில் ராஜ்யம் பண்ணி... அப்பா, தாத்தா, தாத்தாவுக்குத் தாத்தா என்று....

இந்தப் பரிணாமக் குணம் மட்டும் எத்தனை நூறு தலைமுறையானாலும் மாறாது போலும்!

பூக்களை அள்ளிக் கையில் குவித்து நீண்ட மூச்சை இழுத்து முகர்ந்தாள். அந்தக் கணம் அவளுக்குள் கால ப்ரக்ஞை தவறிப்போய்,

'இன்று விடியற்காலை தன் தலையிலிருந்து உதிர்ந்த அருமைப் பூக்களோ அவை' என எண்ணிக் கொண்டாள்.

---



''ரெண்டு பேரும் ஒரே டிசைன்லே சட்டை போட்டிருக்கீங்களே; சகோதரர்களா? இல்லே, நண்பர்கள் தானா?''

''ரெண்டுமில்லே.ஒரே ஜவுளிக் கடையிலே கடன் வாங்கறவங்க; அவ்வளவுதான்!''

-பெ. கலாசாமி

---



# புரிந்தது ஜகந்நாத தத்துவம்!

பி. ஆர். குமார்

நாங்கள் பிரயாணம்செய்த அந்த பாசஞ்சர் ரயிலின் வண்டி 'நட்ட' நடு நிசியில் அந்த ஊரைச் சென்றடைந்தது. இறங்கித்தான் ஆகவேண்டும். ஏனென்றால், அதற்கு மேல் வண்டி போகாது! மேலும் பல நாட்களாகப் பிளான் போட்டுப் போட்டு, ஒரு மாபெரும் அகில இந்திய, ஏன், அகில உலகப் புகழ் வாய்ந்த திருத்தலத்துக்கு வந்திருக்கிறோம்!

கண்ணைக் கசக்கி, தூக்கத்தை விரட்டி, குழந்தைகளை எழுப்பி, அழவைத்து, மூட்டை முடிச்சுக்களைத் திரட்டிக் கொண்டு பிளாட்பாரத்தில் காலடி வைத்தபோது—

யம்மாடியோவ்! யார் இந்த ஆசாமி?

பத்து விரல்களிலும் பளபளக்கும் மோதிரங்கள், 'பளிச்'சென்ற பஞ்ச கச்சம், ஆளைத் தூக்கி ஒரேயடியாக அடிக்கும் 'சென்ட்' வாசனை, கையில் சேனைக் கிழங்கை விட சற்றுச் சின்ன சைஸில் 'டிஜிடல் கடிகாரம்!'

''ஊருக்கு எந்த ஜில்லா?''

மார்புறத் தழுவிக் கொள்ளாத குறையாக வெகுஅருகில் வந்து வெகு வாத்சல்யத்துடன் அந்த 'ராஜகுமார' ஆசாமி கேட்கும்போது சொல்லாமல் இருந்தால் எப்படி? எப்போதும் எல்லாரிடமும் சொல்லுவது போல் ''தென்னார்க்காடு மாவட்டம்'' என்று கூறி வைத்தேன்.

அவரும் அதைக் கொஞ்சம் கூடச் சட்டை பண்ணாமல், ''வாருங்கள்! நம் ஆஸ்தானத்துக்குப் போவோம்! அங்கு கட்டில் உண்டு! எலக்ட்ரிக் ஃபான் உண்டு! அட்டாச்ட் பாத்ரூம் உண்டு!'' என்று அடுக்கிக் கொண்டே என் கையிலிருந்த பெட்டியை வாங்கிக் கொண்டார்! (பிடுங்காத குறைதான்!)

நானா கொடுப்பேன்? ஊஹூம்! அவருடைய சாகஸங்களைப் பற்றி முன்னமேயே தெரிந்து வைத்திருக்கிறேனே!

அது சரி, அவர் யார் என்றுதானே கேட்கிறீர்கள்? அவர்தான் புகழ் பெற்ற ''பூரி பண்டா.'' மாட்டிக் கொண்டால், ''கொண்டா, கொண்டா'' என்று நம்மிடம் கடைசிப் பைசா—வரை கறந்து விடுவார்! இவர்களில் ''டா (பெரிய) பண்டா'' என்ற ''சூப்பர் டீலக்ஸ்'' பிடுங்கல் ரகம் வேறு தனியாக இருக்கிறது.

''எங்கு காணினும் சக்தியடா!'' என்பது போல், பூரி க்ஷேத்திரத்தில் எங்கு திரும்பினாலும் பண்டாக்கள்தான்! ராஜா காலத்தில் அவர்கள் அனைவரும் நாட்டின் நிலவரத்தை நேரில் கண்டறிந்து அரசவையில் தகவல் கொடுத்து வந்தவர்களாம்!

அப்பேர்பட்ட பண்டாவின் பிடியிலிருந்து 'நீமட்டும்' எப்படித் தப்பிப்போய் பூரி ஜகந்நாதனைத் தரிசனம் செய்து வந்தாய் என்றுதானே கேட்கிறீர்கள்? அது மாபெரும் ரகசியம் — ஜகந்நாத தத்துவத்தைப் போல!

✖ 'ரத யாத்ரா'வின் போது பலபத்ரா, சுபத்ரா, ஜகந்நாதர் மூவரும் தேரில் பவனி வரும் காட்சி





- (இடமிருந்து வலமாக) பலபத்ரா, சுபத்ரா, ஜகந்நாதர்
- 'ரத யாத்ரா'வின் போது பூரி ஜகந்நாதர் தேருக்குக் கொண்டு வரப்படுகிறார். சுற்றிலும் மனிதக் கடலின் ஒரு சிறு பகுதி
- பூரி ஜகந்நாதர் ஆலயத்தின் நுழைவாயில் தோற்றம்

# திருத்தலம் கண்டேன்!



நம் பாரத நாட்டை வலம் வந்தால் தென் கோடி ராமேஸ்வரத்தில் ராமநாதன், மேற்கே துவாரகாநாதன், வடக்கே ஹிமாசலத்தில் பத்ரிநாதன், இங்கு கிழக்கே ஒரிஸ்ஸாவில் ஜகந்நாதன்!

பூரி ஜகந்நாதர் கோயில் மிகப் பழைமையான தோற்றம் கொண்டது. பிரம்மாண்டமான அமைப்பு! தமிழ்நாட்டு சுவாமி மலையைப் போல 'கட்டு மலையில்' அமைந்துள்ளது. கோயில் நுழைவாயிலிலிருந்து பல படிகள் உயர ஏறிச் செல்ல வேண்டும். கோயிலையே ''நீலாசலம்'' (நீலகிரி) என்று அழைக்கிறார்கள்.

ஏழாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட கோயில்! ''த்வி ஆவரண'' என்ற முறையில் இரண்டு சுற்றுப் பிராகாரங்கள் உள்ளன (ஸ்ரீரங்கத்தில் ஸப்த ஆவரண என்று ஏழு பிராகாரங்கள்உள்ளன.) மூலவர் சன்னிதிக்கு மேலே மட்டும்தான் கோபுரம். (தஞ்சைப் பெருவுடையார் கோவில் போல.)

சந்நிதிக்குச் செல்கிறோம்! தூரத்திலிருந்து பார்த்தாலே மூன்று பெரிய உருவங்கள், மாலையிட்டு, அலங்கரிக்கப்பட்டு, தீப ஆராதனைகள் காட்டப்படுவது தெரிகிறது. கிட்டே நெருங்க நெருங்க ஆச்சரியம் மிகுதியாகிறது!

என்ன இது! நம்ம ஊர்க் கோவில்களில் இருப்பது போலச் சிலை வடிவில் விக்ரகமாக சுவாமி காட்சி தரவில்லையா?

இல்லை! இல்லை!! இல்லை!!!

''நீங்கள் காண்பது மூன்று பெரிய மர உருவைகள்! வேப்ப மரத்தின் அடிப் பாகத்தில் வெட்டி வைக்கப்பட்டுள்ளன! கை, கால்களெல்லாம் அரை குறைதான்! கண்கள் மட்டும் மிகப் பெரிதாக இருக்கும். வலது கோடியில் இருப்பவர்தான் ஜகந்நாதர்! அவருக்குப் பக்கத்தில் சுபத்ரா! சுபத்ராவின் பக்கத்தில் பலபத்ரா!''

பக்கத்தில் யாரோ ஒருவர் வெளி நாட்டு டூரிஸ்டுகளுக்கு விளக்கி வெளுத்துக் கொண்டிருக்கிறார்.

ஆமாம்! ஜகந்நாதர் வைஷ்ணவரா? சைவரா? புத்தரா? ராமரா? கிருஷ்ணரா?

எல்லாவற்றிற்கும் ''ஆம்! இல்லை!'' என்ற பதில்கள் மாறி மாறிக் கிடைக்கின்றன. அவர் 'சவரர்' என்ற ஆதி வாசிகளின் கடவுள் என்கின்றனர் சிலர். ''பைரவர் — பைரவி தத்துவத்தை எடுத்துக் காட்டுகிறார்'' என்கின்றனர் இன்னும் சிலர்!

மொத்தத்தில் ஜகந்நாதர் யார் என்ற கேள்வியை வைத்துக் கொண்டு மண்டையை உடைத்துக் கொள்ளாத குறையாக ஆண்டாண்டு காலமாக ஆராய்ச்சி செய்து வருகின்றனர் வல்லுநர்கள்! ஆனால் அவர் ஜகத்துக்கே நாதன் என்று கருதி லட்சோப லட்சம் மக்கள் நாள்தோறும் வந்து அவரைத் தரிசித்துப் போகின்றனர். கோயிலில் அரை மணி நேரம் நின்றால் இந்தியாவிலிருக்கும் அத்தனை மாநில மக்களிலும் ஒரு சிலரைப் பார்த்துவிடலாம். தேசிய ஒருமைப்பாட்டுக்கு இதை விட வேறு என்ன சான்று வேண்டும்?

சுவாமி சந்நிதிக்கு எதிரே உள்ள தீப ஸ்தம்பத்தில் கட்டாயம் ஒரு அகல் விளக்கு ஏற்றி வைத்து வழிபடுகிறார்கள் பக்தர்கள். பகவான் ஸ்ரீகிருஷ்ணனின் ச்யமந்தக மணி அந்த தீபஸ்தம்பத்தினுள்ளே இருக்கிறதாம். சிலர் அதைக் கட்டி அணைத்துத் தழுவிக் கொள்கிறார்கள். தீபஸ்தம்பத்தின் அடியில்

கீத கோவிந்தம் இயற்றிய ஜெயதேவர் முக்தியடைந்தாராம்.

ஜகந்நாதனுக்கு ஒரு நாளைக்கு ஐம்பத்தாறு வகை யான உணவு வகைகள் நைவேத்தியம் செய்யப்படுகின்றன. இவை ''போக்'' என்று அழைக்கப்படுகின்றன. கோயில் மடைப்பள்ளியிலிருந்து அடிக்கொருதடவை மூக்கைத் துணியால் கட்டிக் கொண்டு காவடி எடுப்பது போல் நைவேத்தியங்களை எடுத்துச் செல்கிறார்கள். பார்க்க வேண்டிய காட்சி இது. அத்தனை நைவேத்தியங்களிலும் மிகவும் புனிதமானதும், பிரசித்தி பெற்றதுமான ''மஹா பிரசாத்'' பிற்பகல் மூன்று மணிக்கு ஜகந்நாதனுக்குப் படைக்கப்படுகிறது. இது அரிசி சாதமாகும்! இதோடு கூட்டு, கறி ஆகியவையும் நைவேத்தியம் செய்யப்படுகின்றன. சுவாமிக்குப் படைக்கப்பட்ட பின்னர் அதை யாத்திரீகர்களுக்கு விலைக்குக் கொடுக்கிறார்கள். கோயிலிலேயே இலை போட்டுச் சாப்பிடலாம்! சட்டி பானைகளில் கிடைக்கும் இந்த 'மகா பிரசாதத்'தை 'ஆர்டர்' கொடுத்து நிறையச் செய்யச் சொல்லி, கல்யாணங்களுக்கும், மற்ற வீட்டு விசேஷங்களுக்கும் லாரி மூலம் கொண்டு செல்கிறார்கள் ஒரிஸ்ஸாக்காரர்கள்! ஏன்? பல வீடுகளில் உலர்த்தப்பட்ட இந்த அரிசி சாதத்தையே ஜகந்நாதனாக வழிபடுகிறார்கள்! ஜகந்நாதன்தான் ஒரிஸ்ஸாக்காரர்களுக்கு எல்லாம்!

சாதாரண நாட்களிலேயே எள்ளுப் போட்டால் எள்ளு விழாத கூட்டம் இருக்கும் இக்கோயிலில் வருடாந்தர ''ரத யாத்ரா''வின் போது (தேர்த் திருவிழா) கூட்டம் சொல்லி மாளாதாம்! தேர்த் திருவிழா அன்று கட்டாக்கில் உள்ள ரேடியோ நிலையம் நாள் பூராவும் நேர்முக வர்ணனைக்கு ஏற்பாடு செய்கிறது.

பூரி ஸ்தலமே ஜெகந்நாதர் கோயிலை நம்பித்தான் இயங்குகிறது. ஊர் பூராவும் தர்மசாலாக்கள் (சத்திரம்) சின்னதும் பெரிதுமாக லாட்ஜுகள், ஹோட்டல்கள், மடக் கடைகள்! சங்கரர், ராமானுஜர் மடங்களைத் தவிர வேறு பல ஆயிரக் கணக்கான மடங்கள் இவ்வூரில் இருக்கின்றன. கடற்கரை நகரமாதலால் வெளிநாட்டு உல்லாசப் பயணிகள் ஏராளமாக வருகிறார்கள்! அரசு மற்றும் பெரிய பெரிய தனியார் நிறுவனங்கள் தங்களுடைய ஊழியர்களை விடுமுறை நாட்களில் மகிழ்விக்கக் கடற்கரை ஓரமாக 'ஹாலிடே ஹோம்'களைக் கட்டிப் போட்டிருக்கின்றன.

நகரில் போக்குவரத்துக்கான ஒரே வாகனம் சைக்கிள் ரிக்ஷாதான்! பிச்சைக்காரர்களுக்குப் போட ''சில்லறை இல்லையே'' என்றால் ''நாங்களே தருகிறோம்'' என்கிறார்கள் அவர்கள்! ஒரு ரூபாய்க்குத் தொண்ணூறு பைசா சில்லறையாகக் கொடுப்பார்கள்! பத்துப் பைசா கமிஷன் கொடுத்தது போக இன்னொரு பத்துப் பைசா போட வேண்டும்!

''ஜகந்நாத தத்துவம் என்ன என்று புரிந்ததா?'' என்று கேட்டார் ஒரு ஒரிஸ்ஸா நண்பர்.

''புரியாமல் என்ன ஸார்! பண்ணுகிற தப்பையெல்லாம் பண்ணிவிட்டு, கடைசியில் கடவுளின் காலடியில் போய் விழுகிறான் மனிதன்! என்னிடம் என்ன இருக்கிறது? எல்லாம் உன் செயல் என்று ஜகந்நாதர் தன் மூளிக் கைகளை மேலே உயர்த்தி, கண்களை உருட்டி விழிக்கிறார்! அவனையே உற்றுப் பார்க்கிறார். 'அப்னா ஹாத் ஜகந்நாத்' (தன் கையே தனக்குதவி) என்பதுதான் ஜகந்நாத தத்துவம்!'' என்று எனக்குத் தெரிந்த வகையில் ஒரு சின்ன உபந்யாசம் செய்தேன்.

'' 'மஹா பிரசாத்' வாங்கி வந்திருந்தால் தாருங்கள்!'' என்று கையை நீட்டினார் அவர்!

## 'யார் யார் யார் அவர் யாரோ?

''காரை முத்துப் புலவரை உனக்குத் தெரியுமா?''

''யாருப்பா அவரு?''

''அடப் பாவி!... வணங்காமுடியைத் தெரியாது?''

''என்ன புதிர் போடறே... சிவாஜி நடிச்ச படமாச்சே அது?''

''இது ஒருத்தரோட புனைபெயர் அப்பா..., சரி, கமகப்ரியா யாருன்னு தெரியுமா?''

''தலையைச் சுத்துது. யாருன்னு சொல்லு''

''துப்பாக்கின்னும் ஒரு பேர் அவருக்கு இருக்கு!''

''போச்சுடா! ஆளை விடு. யாரு இவங்க?''

''இவங்க எல்லாமே ஒருத்தர்தான்..... நாடறிந்த,—ரொம்பப் பிரபலமான அழ.சா. முத்தையாவோட புனைபெயர்தான் இத்தனையும்!''



''எனக்குத் தெரிஞ்ச இந்த மாதிரி முத்தையான்னு ஒருத்தரும் அவ்வளவு பிரபலமா இல்லையே...''

''சரிதான் போ! பழையபடியும் புனைபெயரைச் சொன்னாத்தான் உனக்குப் புரியும் போல இருக்கு...நம்ம கவிஞர் கண்ணதாசன் தான் இத்தனை பெயரும் வைச்சிருக்காரு!''

(ஆதாரம்: பேராசிரியர் மது. ச. விமலானந்தனின் 'தமிழ் இலக்கிய வரலாறு')

- முத்து தங்க ஐயப்பன்


THE SEAL OF TANTEX QUALITY
டான்டெக்ஸ்®
ஒவ்வொரு வகையிலும் சிறந்தவை
தரத்தில், துணி வகையில்,
தயாரிப்பில், உருக்குலையாத
நீடித்த உழைப்பில், எல்லா
விதத்திலும் சிறந்தவை.
சிக்கனமானதும் கூட.
IS : 4964
ISI
ஒட்டி உறவாட
டான்டெக்ஸ்
டான்டெக்ஸ் ரகங்கள்
ப்ரீஃப்ஸ் • வெஸ்ட்ஸ்
• காஷ்வெல்ஸ்
ஸ்போர்ட்ஸ் பனியன்கள்
சிறுவர்களுக்கான ரகங்கள்
டான்டெக்ஸ்
ttk தயாரிப்பு
டி.டி. கிருஷ்ணமாச்சாரி & கோ
சென்னை-600 086.
Imageads M-TTK-1361 Tam



## 6

பரோட்டாவை மடித்து டிபன் டப்பாவில் வைக்கையில் கைவிரல்கள் லேசாக நடுங்கின. அவற்றைச் சமாதானப்படுத்துகிற மாதிரி சாந்தி இரண்டு கைவிரல்களையும் கெட்டியாகக் கோத்தபடி ஒரு வினாடி நின்றாள். கொஞ்ச நாட்களாக மார்பில் அடிக்கடி ஆரம்பித்திருந்த டமாரம் முடுக்கி விட்ட மாதிரி ஒரு அவசரத்துடன் ஆரம்பித்தது. அதைச் சட்டை செய்யாமல் பானையிலிருந்து நீர் எடுத்து அவள் வேகத்துடன் குடித்தாள்.

''போயேன்! நானு உன்னைத் தடுத்து நிறுத்தறேன்? உன்னை நம்பி நான் இருக்கேன்னு பெருமைப் பட்டுக்காதே. எனக்கு வேலை இருக்கோ, இல்லியோ, என்கிட்ட காசு இருக்கோ இல்லியோ, பிச்சை எடுத்தாலும் எடுப்பேனே தவிர, உன்னைக் கேட்க மாட்டேன்.''

சாந்தி நெற்றியைத் துடைத்துக் கொண்டு சமையல் மேடையைக் கழுவி விட்டாள்.

மறுபடியும் வேலையை விட்டிருப்பான். அதனால்தான் இத்தனை ஆங்காரம். இவனுக்கு எப்பொழுது புத்தி வரப் போறதோ? பொறுப்பை சுமக்கத் தெரியாதவன். நான் மட்டும் சுமக்க வேண்டும் என்று எப்படி 'எதிர் பார்க்கிறான்?

''இதப் பாரு, நல்லாக் கேட்டுக்க. இந்த மடையன் கத்தினு எனக்கொண்ணும் இல் லேங்கற திமிரோட வாயை மூடிண்டு உன் இஷ்டப்படியே இருந்தே எனக்கு ரொம்பக் கோபம் வரும்.''

கழுவிக் கொண்டிருந்த துடைப்பத்தை அப்படியே நிறுத்தி அவள் அவனைத் திரும்பிப் பார்த்தாள்.

''நீங்க எதுக்குக் கத்தறீங்க? நான் என்ன பதில் சொல்லணும்னு எனக்குச் சத்தியமாப் புரியல்லே.''

''புரியாதே? சின்னப் பின்னே — ஒண் ணுமே புரியாது. இட்ட வட்டமா சொல் றேன் கேட்டுக்க. என்னை நீ மாத்த முடியாது. நான் இத்தனை வருஷமா எப்படி இருந்தேனோ அப்படித்தான் இப்பவும் இருப்பேன். என்னை நீ ஒரு கேள்வி கேட்க முடியாது. நான் உன் புருஷன்ம! ஏன்ய்யா இன்னிக்கு ஆபீ ஸுக்குப் போகலேன்னு நீ கேட்க முடியாது. எங்கம்மா எங்கப்பாவைக் கேட்டதில்லே. எங்க பாட்டி எங்க தாத்தாவைக் கேட்ட தில்லே. ஆனா நீ கேக்கறே. என்னா சம்பாதிக் கிற திமிரு!''

அவள் ஒரு ஆயாசத்துடன் தன் வேலையில் கவனத்தைத் திருப்பினாள்.

'நானும் சம்பாதிக்கலேன்னா நீ என்ன பசெய்வே?'

ஸிங்கில் கொட்டிக் கொண்டிருந்த குழாயை நிறுத்திப் பரபரவென்று கீழே துடைத்தாள்.

இத்தனை ஆங்கார வார்த்தைகளுக்கும் காரணம் அவள் கேட்ட ஒரு சின்னக் கேள்வி. அவனுடைய மனைவி என்கிற உரிமையில் கிளம்பிய கேள்வி.

''ஆபீசுக்கு நாழியாகல்லே? குளியுங்க ளேன்?''

அதற்குப் பதில்தான் இந்தச் சொல் சாட் டைகள்.

ஆஸ்பத்திரிக்கு நேரமாகி விட்டது என்கிற பரபரப்போடு அவள் நகருகையில் அவன் வழி மறித்தான்.



# அந்தி நேரத்து உதயங்கள்

## வாஸந்தி

''நான் சொன்னதைப் புரிஞ்சுண்டயா?''

அவன் வெகு பிரயாசைப்பட்டு ஒரு சிநேகப் புன்னகை செய்தான்.

''நான் இனிமே உங்க வழிக்கே வரல்லே. ஸாரி.''

ஒழிந்து போ என்கிற ஒரு ஹுங்காரத் துடன் அவன் வழி விட்டான்.

''ஆஸ்பத்திரிலேந்து நேரே வீட்டுக்கு வா. நா இங்கேதான் இருப்பேன். என் னுடைய ஞாபகமும் உனக்கு இருக்கட்டும்.''

அவள் பதிலே சொல்லாமல் உள்ளே பொங்கி வந்த ஆத்திரத்தை அவசரமாக அமுக்கியபடி தன்னைத் தயார் செய்து கொண்டு வெளியில் லிஃப்டுக்குக் காத்து நிற்க, கண்களில் நீர் பயமுறுத்தியது.

லிஃப்டில் நல்ல வேளையாக யாரும் இல்லே. பார்ப்பதற்கு யாரும் இல்லே என்ற தைரி யத்தில் அந்தச் சில விநாடிகளில் அவள் வெட்கமில்லாமல் கண்ணீர் விட்டுச் சிவப்பு விளக்கில் 'ஜீ' பளிச்சிட்டுத் தரையைத் தொடும்போது முகத்தில் வழக்கமான மந்த ஹாசத்துடன் வெளியே வந்தாள். மார்பில் மறுபடி டமாரமடித்தது. அதன் கலவரம் ஆஸ்பத்திரியை அடைந்து வெகு நேரம் வரையிலும் இருந்தது. வார்டுக்குள் நுழைந்து, நீள நெடுக விரிந்திருந்த கட்டில் வரிசைகளைப் பார்த்ததும் சட்டென்று அடங்கியது.

''குட் மார்னிங்!''

''குட் மார்னிங்!''

சர்மாவின் கால் அந்தரத்திலிருந்து கீழே இறங்கி யிருந்தது.

''எப்படி இருக்கிறீர்கள் சர்மா ஸாப்?''

''காலே இன்னும் சரியாக ஊன்ற முடிய வில்லே நர்ஸ்!''

''கொஞ்ச நாளைக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். எக்ஸர்சைஸ் செய்கிறீர்கள் அல்லவா?''

''செய்கிறேன், செய்கிறேன். செய்யா விட்டால் யார் இங்கே விடுகிறார்கள்?''

சாந்தி சிரித்துக் கொண்டே அவருடைய தோளைத் தட்டினாள்.

''உடற் பயிற்சியை மட்டும் நீங்கள் அலட் சியமாக நினைக்கக் கூடாது. சர்மா ஸாப். - அதுதான் உங்கள் காலுக்குப் பழைய பலத்தைக் கொடுக்கும்.''

''இன்னும் ஒரு வாரத்தில் நான் வீட் டுக்குப் போகலாம் என்கிறார்கள் சாந்தி பெஹன்.''

''தெரியும்: அதனால்தான் சொல்கி றேன். வீட்டுக்குப் போன பிறகு எக் ஸர்ஸைஸை மறக்கக் கூடாது. ஊன்று கோல் பிடித்துக் கொண்டு எனக்கு நடந்து காண்பியுங்கள்.''

''கணுக்காலில் வலிக்கிறது.''

''நேற்றே சொன்னீர்களே! இன்றி லிருந்து அல்ட்ரா ஸானிக் தெரப் பிக்கு அழைத்துப் போகிறேன்.''

''குட்மார்னிங் நர்ஸ் ஆண்டி!''

''குட்மார்னிங் மிக்கி, வலி இருக்கா இப்போ?''

''இல்லே.''

''கொஞ்சம் பந்தாடலாமா இன் னிக்கு?'' மிக்கியின் கண்களில் புஷ்

பங்கள் மலர்ந்தன. ''ஓ! வெளியிலேயா?''

''இல்லே. இங்க ஒரு ரூம் இருக்கு. அங்கே அழைச்சிண்டு போறேன். அங்க உன்னை மாதிரி அடிபட்டுண்டவங்க பந்தாடிண்டிருப்பாங்க.''

''ஏன்?''

''ஏன்னா அப்பத்தான் இந்த இடுப்புக்கும் கைக்கும் பலம் வரும். ஓ.கே?''

''ஓ.கே!''

ராம்ஸிங் படுக்கையில் சாய்ந்தபடி உட்கார்ந்து கொண்டு ரொட்டியை டீயில் நனைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். வெட்டப்பட்ட முழங்காலின் கட்டு இன்னும் அவிழ்க்கப்படவில்லை. அவளைப் பார்த்துக் கூச்சத்துடன் புன்னகைத்து டீக்கோப்பையையும் ரொட்டியுமாகக் கைகளைக் கோத்து நமஸ்கரித்தான்.

''நமஸ்தே பஹன்ஜி!''

''நமஸ்தே! எப்படி இருக்கிறீர்கள் ராம்ஸிங்?''

அவன் விரக்தியுடன் புன்னகைத்தான்.

''என் தலையெழுத்து எப்படி என்றுதான் உங்களுக்குத் தெரியுமே! நான் என்ன பதில் சொல்வேன்?''

தான். ஏதோ பீறாரியில் சொல்லிப் பிரலாபித்தாள்.

''என்ன சொல்கிறார் உங்க அம்மா?''

''நன்றாக இருந்த காலை வெட்டி எடுத்து விட்டார்களே என்கிறாள். வயலை இனிமேல் எப்படிக் கவனிப்பான் என்கிறாள்!''

சாந்தி புன்னகைத்துக் கொண்டே சொன்னாள்.

''முழங்கால் எலும்பில் புரையோடிப் போயிருந்தது என்று அவருக்குச் சொல்லுங்கள். காலை வெட்டா விட்டால் பிறகு உயிருக்கே ஆபத்தாகப் போயிருக்கும் என்று சொல்லுங்கள். முழுசாகப் பிள்ளை போய் விட்டால் உங்கள் அம்மாவுக்கு எப்படி இருக்கும்? முன்னை விட இப்பொழுது வயலை நீங்கள் நன்றாகக் கவனிக்கலாம். ஏன் என்றால் உங்களுக்கு இப்பொழுது எந்த வியாதியும் இல்லை.''

அவள் சிரித்துக் கொண்டே மற்ற மூலைக்குத் திரும்புகையில் ஹரி தன்னையே பார்த்துக்கொண்டிருப்பதை உணர்ந்தாள்.

''குட் மார்னிங்!''

''குட் மார்னிங்! எப்படி இருக்கிறீர்கள்?''

''அட, உங்களுக்குத் தமிழ் தெரியுமா?''



''கல்யாணம் ஆனதும் ரெண்டு வருசமா உங்க வீட்டிலே தங்கின உங்க மாப்பிள்ளை எப்படித் திடீர்னு ஊருக்குக் கிளம்பிவிட்டார்?''

''நாங்க வாங்கின புது டேப்ரிக்கார்டரில்.... 'மணியடிச்சா சோறு.... இது மாமியாரு வீடு....'ங்கிற பாட்டை அடிக்கொருதரம் வைத்தேன்..!''

கால்மாட்டிலிருந்த அவனுடைய சார்ட்டைப் பார்த்தபடி அவள் பளிச்சென்று புன்னகைத்தாள்.

''உங்கள் தலையெழுத்து ரொம்ப நன்றாக இருக்கிறது ராம்ஸிங். ஒரு காலில் பாதி போனால் என்ன? இன்னொரு கால் நன்றாக இருக்கிறது. இந்தக் காலுக்கு மரத்தால் கால் செய்து இணைத்து நீங்கள் நடக்கும்படி செய்து விடுவோம் சில மாதங்களில். டாக்டர் உங்களுக்குச் சொல்லவில்லையா?''

அவன் தலையைக் குனிந்து கொண்டு மெல்ல முணு முணுத்தான்.

''சொன்னார், சொன்னார். இருந்தாலும் சொந்தக் காலில் நடக்கிற மாதிரி ஆகுமா? என்னுடைய நிலத்தை முன்னை மாதிரிக் கவனித்துக் கொள்ள முடியுமா?''

''ஏன் முடியாது?''

அவனுடைய அம்மா பக்கத்தில் தரையில் உட்கார்ந்து அவர்களது பேச்சை அலங்க மலங்க முழித்தபடி கேட்டுக் கொண்டிருந்

''தெரியும். நான் தமிழ் பேசறவதான்!''

''குட். நீங்க சிரிச்சா கே. ஆர். விஜயா மாதிரி இருக்கு.''

அவள் சிரித்தாள்.

''ஸ்கிரீன் எங்கே காணோம்?''

''நான்தான் எடுக்கச் சொன்னேன். என் தலைக்கு மேலே இருக்கிற ஓட்டடையைப் பார்த்துப் பார்த்து அலுத்துப் போச்சு.''

அவள் மறுபடி சிரித்தாள்.

''இப்ப மத்த இடத்திலே இருக்கிற ஓட்டடையும் கண்ணுக்குத் தெரியறதா?''

அவள் சில விநாடிகள் அவனுடைய பரிசோதனைகளுக்கு சடு கொடுத்தபடி பேசாமலிருந்தாள். இன்னொரு நர்ஸின் உதவியோடு அவள் அவன் முதுகுத்தண்டுக்குச் சிறிதளவு கூடத் தொந்தரவு கொடுக்காமல் படுக்கை விரிப்பைச் சரி செய்தாள்.

''யூ ஆர். ரைட்'' என்றான் அவன் நிதானமாக. ''நான் தனியாக இல்லை.''

''அது உங்களுக்குத் தென்பைக் கொடுக்கக் கூடிய விஷயம் மிஸ்டர் ஹரி.''

அவன் சட்டென்று சிரித்தான்.

''நிச்சயமாகக் கொடுக்கவில்லை. விரக்தியை ஏற்படுத்தும்னு வேணு சொல்லலாம். மேலேமேலே பறக்கிறோம்னு நாம நினைச்சுண்டிருக்கறச்சே 'அடடே பைத்தியக்காரா! உனக்கு இறக்கையே இல்லையே'ன்னு ஞாபகப்படுத்தினு எப்படி இருக்கும் அப்படி!''

அவனுடைய வார்த்தைகள் தன்னுள் ஏற்படுத்திய ஆச்சரியத்தை மறைத்தபடி அவள் சின்னப் புன்னகையுடன் அவனது உடலின் கட்டுக்களையும், சருமத்தையும் ஆராய்ந்தாள்.

''இப்பவும் பறக்க முடியும் மிஸ்டர் ஹரி!''

''ஆகா! பேஷா. மனசாலேதானே?''

''மனசாலே பறக்க முடிஞ்சாத்தான் உடலாலேயும் சாத்தியம்!''

''நர்ஸ் உங்களைப் பேர் சொல்லிக் கூப்பிடலாமா?''

''தாராளமாக!''

''தாங்க் யூ சாந்தி. எத்தனை நாளா இந்த மாதிரி ஏமாத்தற தொழில்லே இருக்கீங்க?''

அவள் திடுக்கிட்டு அவனைப் பார்த்தாள்.

அவன் வெள்ளையாகச் சிரித்தான்.

''ஐ மீன் இந்த நர்ஸ் வேலையிலே...''

''நீங்க என் வேலையைப் பத்தி இவ்வளவு கேவலமாப் பேசினீங்கன்னு உங்களைக் கவனிக்க வேறு நர்ஸ் கிட்டச் சொல்றேன்.''

அவன் சட்டென்று அவளுடைய கையைப் பிடித்தான்.

''ஐய்யய்யோ, நான் சும்மா சொன்னேன். விளையாட்டுக்காக. இதமாப் பேசற ஆளுக்காக ஏங்கிண்டிருக்கேன். நீங்களும் வரலேன்னு மெண்டல் கேஸாப் போயிடுவேன்.''

அவள் யோசனையுடன் பார்த்தாள். அந்தக் கண்களில் ஏக்கம் நிறையவே தெரிந்தது. அந்தப் பெண் பிறகு வரவேயில்லையோ?

''உங்கள் அப்பா அம்மா எல்லாம் எங்கே இருக்கிறாங்க ஹரி?''

அவன் விட்டத்தைக் காண்பித்தான்.

''கூடப் பிறந்தவர்கள்?''

உதட்டைப் பிதுக்கினான்.

அவள் ஜாக்கிரதையாகக் கேட்டாள். ''மாயா—ரொம்பக் கலங்கிப் போயிருப்பாள் இல்லையா?''

''கலங்கல்லே. கலைச்சுட்டா.''

''எதை?''

''இத்தனை நாள் போட்ட வேஷத்தை.''

எந்தக் கேள்வியும் மேற்கொண்டு கேட்காமல் அவள் தன் வேலையில் கருத்தாக இருந்தாள்.

''என்னாலே அவளுக்கு எந்த விதப் பிரயோஜனமும் இல்லே சாந்தி.''

இவனுடைய துக்கத்தைத் தான் எந்த வகையில் சமாதானப்படுத்த முடியும் என்று அவளுள் திகைப்பேற்பட்டது.

''இடுப்புக்குக் கீழே சுரணையே இல்லாமப் போனவனால் என்ன பிரயோஜனம் சொல்லுங்க!''

அவள் சட்டென்று கூர்மையாகப் பார்த்தாள்.

''யார் அப்படிச் சொன்னது உங்களுக்கு?''

''அவதான்.''



பம்பாய் தொலைக்காட்சி நேயர்களுக்கு ஒரு வரப்பிரசாதம். 7½ அங்குலம் நீளமும், ஒரு சிகரெட் பாக்கெட்டின் அளவு அகலமும் கொண்ட பூஸ்டர் என்னும் சாதனமும், 13 கம்பிகள் கொண்ட பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்ட எட்டு அடி ஆன்டென்னாவும் தான் அந்த வரப்பிரசாதம். ஆகும் செலவு ரூபாய் ஆயிரம். இதன் மூலம் பம்பாய் டீவி நேயர்கள் அபு தபி, ஓமன், கராச்சி நிலையங்களின் கலர் ஒலிபரப்பைக் கண்டு களிக்கிறார்கள். - இந்தியா டுடே.

- கலாமூர்த்தி

''இப்படியே ஆயுசு முழுக்க இருக்கப் போறதில்லே நீங்க!''

அவன் விரக்தியுடன் சிரித்தான்.

''எதிர் காலத்தைப் பத்தி யார் யோசிச்சது? வாட் அபௌட் த ப்ரஸண்ட்? லிவ் இன் தி பிரஸண்ட்!''

''அப்ப அந்தந்த தருணத்திலே என்னென்ன ஏற்படுகிறதோ அதை ஏத்துக்கப் பழகிக்கணும்!''

''எல்லாராலேயும் அது முடியாது. 'லார்த்திரேயைப் படிக்கிறவங்களா நீங்க?''

''ஊஹூம். நான் எதையும் படிச்சது இல்லே. இந்த வேலை பார்க்கறதிலே ஒரு விஷயம் எனக்குத் தெரியும். காலம் ஒரே மாதிரி நிக்கறதில்லே. நம்பிக்கைன்னு ஒண்ணு இருந்தா எந்தக் கஷ்டத்துக்கும் நிவர்த்தி உண்டு.''

''இதைத்தான் ஏமாத்து வித்தைன்னு சொல்றேன்.''

அவள் அவனை ஊடுருவிப் பார்த்தாள். பார்வையில் ஒரு தீவிரம் தெரிந்தது.

''சாந்தி, நா மறுபடியும் நடப்பேனா?''

அவள் அவன் பார்வையைத் தவிர்த்தாள்.

''அநேகமா நடக்கலாம்.''

''நடக்க முடியாமப் போனா?''

அவள் மேலே பேச ஆரம்பிக்கையில் அதை வெட்டிக் கொண்டு அவனுடைய கேள்வி எழுந்தது.

''கால் சுவாதீனமே இல்லாமப் போயிடுச்சுன்னு ஆயுசுக்கும் நீங்க என்னைக் கவனிச்சுப்பீங்களா?''

(தொடரும்)



உங்கள் கேசம் அடர்த்தியின்றி
சக்தியின்றி இருக்கிறதா? உங்கள்
கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும்
ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...
EGG
Halo
SHAMPOO
செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த
ஹேலோ எக் ஷாம்பூ
ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தி
யின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும்
காணப்படுகிறது.
பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான
ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம்
நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப்
படியவைத்து அதற்குத் தேவையான எல்லா
ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக
ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.
ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம்
உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும்
தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.
ஹேலோ எக் ஷாம்பூ ...
அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு
HES. C. 4. TM



# அறுபதாம் கல்யாணம்

மீ·ப·சோமு

டி.கே.சி.யின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா ஓசைப் படாமல் நடந்தது. மேள தாளங்கள், சொற்பொழிவுகள் ஏதும் இல்லாமல் மௌனமாகவே நடைபெற்றது. ஆனால் அதில் தமிழ் ஓசை ஒலித்தது. அந்த ஓசை என்றென்றும் நின்று நிலையாக ஒலிக்கக்கூடிய தமிழ்க் கவியின் மணியோசை; கவிமணியின் கவியோசை!

(1) கன்னித் தமிழே போல்
  கம்பன் கவியேபோல்
மன்னும் பொதிகை
  மலையேபோல் — பன்னுநம்
நாடு மகிழச்
  சிதம்பர நாத நண்பா!
நீடுநீ வாழ்க நிலைத்து!

(2) என்னருமை நண்பா!
  இனிய கலைரசிகா!



## ரசிகமணி ரசித்த மணிகள்

தென்னர் தமிழ் வளர்க்கும்
  தேசிகா! — நன்னயச்
சீலம் சிறந்த
  சிதம்பர நாதவள்ளால்
சாலநீ வாழ்க
  தழைத்து!

(3) அன்னை தமிழ்ச் செல்விக்கு
  அருந்தொண்டு செய்தின்னும்
மன்னுலகில் பல்லாண்டு
  வாழியவே — என் இனிய
நண்பா! சிதம்பர
  நாதா! நம் மாமுருகன்
கண்பார்த்து அருளக்
  கனிந்து!

என்று முக்காலும் மூன்று தரம் ஒலித்தது அந்தக் கவிமணியோசை!

இதோ ரசிகமணியின் கடிதம்:

திருக்குற்றாலம்
6—9—42

அருமை நண்பர் கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை அவர்களுக்கு.

ஆடம்பரம் இல்லாமல் அறுபதாண்டு நிறைவை ஒரு சிறு கிரியையாக நடத்த ஏற்பாடாகியிருந்தது. திருக்குற்றால நாதரை இன்று காலை 10 மணிக்குச் சேவித்துவருவதற்கு. குறிப்பிட்ட நண்பர்களையும் இங்கு சாரலுக்கு வந்திருந்த செட்டி நாட்டு நண்பர்களையும் அழைத்திருந்தேன். என் ஜாகைக்குப் பல நண்பர்களும் வந்திருந்தார்கள், கோவிலுக்குப் போவதற்காகத்தான்.

அப்போது தபால்க்காரன் வந்து வெளியே நின்றான். உள்ளேயிருந்த ஒரு ஏழு வயசுப் பையன் (என் தமக்கையார் பேரன்) வெளியே போய்த் தபால்க்காரனிடமிருந்து தபால்களை வாங்கிக்கொண்டு வந்தான். மொத்தமாக நாலு கடிதங்களும் ஒரு பத்திரிகையும் இருந்தன. எப்படியோ பையன் மூன்று கடிதங்களையும் பத்திரிகையையும் வேறே வைத்துவிட்டு, ஒரு கடிதத்தை மாத்திரம் என் கையில் கொண்டு வந்து கொடுத்தான். நான் பிரித்துப் பார்க்கவும் தங்களுடைய கடிதமும் வாழ்த்துப் பாக்களும் இருந்தன.

நண்பர்களைப் பார்த்துக் கடிதம் எங்கே இருந்து வந்திருக்கிறது தெரியுமா? என்று கேட்டுவிட்டுச் சொன்னேன். தேசிக விநாயகம் பிள்ளை அவர்களிடமிருந்து என்று.

செய்யுள் மூன்றிலும் வாழ்த்தோடு புகழ்ச்சியும் இருந்தது பற்றி, நானே வாசித்துக் காட்டுவதில் கொஞ்சம் அலௌகிகம் இருந்ததை உணர்ந்தேன். ஆனாலும் அவைகள் தமிழ் மக்களுக்கு அர்ப்பணமாய் இருந்தது பற்றி நானே வாசிக்கலாம், குற்றம் இல்லை என்று எண்ணி வாசித்தேன்.

✕ புகைப்படம்: கவிமணியும் ரசிகமணியும்

கேட்டவர்கள் அப்படியே லயித்துவிட்டார்கள். அடிகளையும் வார்த்தைகளையுமே மடக்கி மடக்கி வாசித்தேன். உள்ளத்தின் ஆர்வமும் தமிழ்ப் பாஷையின் லாகவமும் மயக்கிவிட்டது எல்லாரையும். வந்திருந்தவர்கள் எல்லாரும் ஏதாவது ஒரு அடி ஒரு வார்த்தையைப் பிடித்து அப்படியே சுவைத்துக் கொண்டிருந்தார்கள்.

பாட்டு முடிந்ததும் கோயிலுக்குச் சுவாமி தெரிசனத்துக்காக எல்லாருமே புறப்பட்டுப் போனோம். போகிற வழியெல்லாம், பையன் தெய்வப் பிரசாதமாகக் கடிதத்தைக் கொடுத்ததாகவே பாராட்டிப் பாராட்டிப்



அவன்: இதுவரை நூறுக்கு மேற்பட்ட சிறுகதைகள் எழுதியிருந்தும் என்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்த்துக்க மாட்டேங்கிறாங்கடா!''

இவன்: ''ஏண்டா?''

அவன்: ''ஒரு சிறுகதையாவது பத்திரிகையில் பிரசுரமாகியிருக்கணுமாம்... அப்பத்தான் எழுத்தாளன்னு ஒப்புக்குவாங்களாம்!''

உ. ராஜாஜி

பேசிக் கொண்டு வந்தார்கள். பலருக்குப் பாடல்கள் பாடமாய் விட்டன. அவைகளைச் சொல்லிக்கொண்டும் தலையை அசைத்துக் கொண்டும் வந்தார்கள்.

இதெல்லாம் இயல்பான காரியம். நண்பர்களாயிருப்பதால் என்னிடம் ஆர்வம். என்னோடு ஒட்டி யிருக்கிறார்கள். தாங்கள் என்னோடு ஒட்டியிருக்கும் உண்மையைப் பேசுகிறீர்கள். தங்கள் தமிழ், உண்மையை அப்படியே பளிங்கில் வைத்துப் பரிமாறுகிறது. நண்பர்கள் கவிகளை அப்படியே விழுங்குகிறார்கள். உண்மையான தமிழ்க் கவிகள் மூன்றோடு என் பெயர் ஒட்டிக் கிடக்கும் பாக்கியம் பெற்றேன்.

முதல் கவி ஆசை பாவத்தை அழகாய்க் காட்டுகிறது. ஆசைக்கு அளவு கிடையாது. எந்தத் தாய்க்கும் தன் குழந்தை ராஜா அல்லவா! வாழவேண்டும் நிலைத்து வாழவேண்டும், எப்படி?

''கன்னித் தமிழே போல், கம்பன் கவியே போல்'' இவைகளுக்கு மேல் — ஸ்தூலமாக, ''மன்னும் பொதிகை மலையே போல்!''

இரண்டாவது கவியில் அருமை பாவம் அப்படியே கிடக்கிறது.

''என்னருமை நண்பா!
இனிய கலைரசிகா!
தென்னவர் தமிழ்வளர்க்கும்
தேசிகா!''

என்று பாடும்போது, தாங்கள் என்னை ஆர்வத்தோடு தழுவிக்கொள்வதாகவே உணர்ச்சி வருகிறது. மூன்றாவது கவியில் தமிழிடத்திலுள்ள ஆக்கிரம் போய், முருகனது திருவடியைப் பற்றுவது அழகான பாவம்.

''அன்னை தமிழ்ச் செல்விக்கு
அருந்தொண்டு செய்தின்னும்
மண்ணுலகில் பல்லாண்டு
வாழியவே''—

முருகன் கண் பார்த்துக் கனிந்து அருள் பாலிக்கும் காரணமாக!

இந்த உண்மைப் பண்புக்கும் எளிமைக்கும் தமிழுக்கும் எங்கே போக தங்களைத் தவிர்த்து! இதுவரையும் ''பாடல் பெறுள்'' என்ற சொல்லில் உள்ள வேகத்தை அவ்வளவாக உணர்ந்தேன் இல்லை. தங்கள் கவிகளைப் பார்த்ததும் அவைகளின் உள்ளக் கிடையைப் பார்த்ததும் சொல்லின் வேகம் தெரிந்தது!

கவிக்குள் பொதிந்து வைத்துவிட்டால், எந்தப் பொருளும் பழுதுபடாமல் இருக்கும் என்று முன் ஒரு கவிஞர் சொல்லியிருக்கிறார். ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்கிய டெக்கா மஸ்லின் கொண்டு பொதிந்து வைத்தாலும் பயனில்லை.

''நூற்றுப்பத் தாயிரம்
பொன்பெறினும் நூற்சீலை
நாற்றிங்கள் நாளுக்குள்
நைந்துவிடும் — மாற்றலரைப்
பொன்றப் பொருதடக்கைப்
போர்வேல் அகளங்கா!
என்றும் கிழியாதென்
பாட்டு.''

தமிழ் உணர்ச்சி என்று ஒன்று இருக்கும் வரை தங்கள் பாட்டு நிற்கும். அதை ஒட்டி என் பெயரும் நின்றுதானே ஆகவேணும்.

மனங்கனிந்து வந்த சொல்லுக்கு மாற்று பத்தரை மாற்றா? அல்ல, ஆயிரத்தரை மாற்றல்லவா? அதற்கு விலை ஏது? விலை மதிக்க முடியாத கவிகள்!

என்னுடைய தனித்த முறையில் தங்களுக்கு நன்றி சொல்லி முடியாது. கவிகளை அனுபவிக்கிறவர்கள் எல்லாருடைய சார்பாகவும் என் நன்றியைச் செலுத்திக்கொள்கிறேன்.

தங்களுக்கு உடம்பு சௌகரியமாய் இருக்கும் என்று நம்புகிறேன். தமிழர்களின் பிரார்த்தனைகளில் இது ஒன்று.

தங்கள்,
டி.கே. சிதம்பரநாதன்

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




## காம்ப்ளான்®

**ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தை-களுக்கென்றே சிறப்பான சில தேவைகள் உள்ளன—வளரும் வயதிலே உடம்புக்குத் தேவைப்படும் மிகச் சிறந்த புரதம், 22 மூலாதார ஊட்டச் சத்துக்கள் —அளிக்கிறது காம்ப்ளான். மறவாதீர்கள், டாக்டர்களின் சிபாரிசு பெற்ற, திட்டமிட்ட உணவு காம்ப்ளான்.

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

"குடும்பத்திற்கான பரிபூரண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி"
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக: தபால் பெட்டி நம்பர் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

லின்டாஸ்—GLC-4-3012 TH

## திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®

# டூப்

## நளினி சாஸ்திரி

**"சா**ர்! இந்தப் பையன் உங்களைப் பார்த்துப் பேசாம போமாட்டேன்னு ரெண்டு நாளா பட்டினியா — பழியா வாசல்லயே கெடக்கான். செத்துருவான் போலிருக்கு. என்ன பண்ணட்டும் சார்."

"சரி. உள்ளே அனுப்பு" என்றான் ரஜனி.

ரஜனி அகில மொழிகளிலும் ஒரு கலக்குக் கலக்கிவிட்ட சூப்பர் ஸ்டார். 1985வரை ரஜனி கால்ஷீட் ஓவர். உண்டு, குடித்து, உறங்க நேரமில்லா ரஜனி அன்று தன் பிறந்த தினமாதலால் வித்தியாசமாக இருக்கட்டுமே என்றுதான் அந்தப் பையனை உள்ளே அழைத்து வரச் சொன்னான்.

அமாவாசையைத் தேய்த்துக் குளித்த கருப்பில், கலைந்த தலையுடன் நுழைந்த அந்தப் பன்னிரண்டு வயதுப் பையனுக்கு ரஜனியைக் கண்டதும் ஜன்ம சாபல்யம் அடைந்த மாதிரி இருந்தது. ஓட்டப் போய் ரஜனி காலில் விழுந்து சேவித்தான். எழுந்து ஸ்டைலாக சல்யூட் விறைப்பாக அடித்தான். ரஜனியிடம் நெருங்கிப் பவ்யமாகக் கன்னத்தைத் தொட்டான். கிள்ளி முத்தம் தந்தான்.

அருவருப்புக் கொள்ளாத ரஜனி பையனைத் தட்டிக்கொடுத்து, "தம்பி பேரு என்ன? தம்பி ஊரு எது? என்ன சமாச்சாரம்?" என்று எக்ஸ்பிரஸ் வேகத்தில் கேள்விகள் அடுக்க, பையன் புரியாமல் விழித்துப் பின் புரிந்ததும், தன் பிளாஷ்பாக் சொன்னான்.

டொய்ங்..... டொய்ங்..... டொய்ங்..... (பிளாஷ் பேக் ஆரம்பம்.)

**வீ**டு. முத்து அந்த உடைந்த கண்ணாடிச்சில்லை ஜன்னலில் வைத்து அரை மணி நேரமாய்த் தலையைக் கலைத்து விட்டான்.

"ஏண்டா! சாமி புண்ணியத்துல அந்த மெக்கானிக் வாரத்துக்குப் பதினைஞ்சி ரூவா தரான். அதுல அஞ்சு ரூவால சினிமால கொண்டு போய்த் தொலைக்கிறியே இது நாயமா? அப்படி சினிமா பாக்கலைன்னு என்னடா குடி முழுகிடும்" — பெற்றவள் அங்கலாய்த்தாள்.

"இத பார் என்ன சொல்லு நம்ப ரஜனி கைல வம்பு வச்சுக்காதே. ரஜனி படம் தண்ணீர் இன்னிக்கு ரிலீஸ். என்னமா சண்டை போடுவார் தெரியுமா? சண்டைக்கே கொடுக்கிற காசு பத்தாது."

"பெரிய ரஜனி. போடா நீயும் போய் அவன்கூடக் கூத்தாடு போ!"

முத்து ஸ்டைலாகத் தலையை உதறிவிட்டு அம்மாவை ஓரக்கண் பார்வையும் களித்த முகமுமாய்ப் பார்த்துக் கொண்டு வெளியேறினான், வேகமாய்.

**வொ**ர்க் ஷாப்பில்:

"டேய் முத்து ஒரு தபா ரஜனி ஆட்டம் ஆடேன் பார்க்கலாம்!" சகபாடிகள் அழைப்புக் கிணங்க இடுப்பு முன்னும் பின்னும் விலுக்விலுக்கென்று துடித்துப் போக — ரஜனி மாதிரி அந்த லேட்டஸ்ட் டேன்ஸ் கொடுத்தான்.

"அட்டகாசம்வாத்யாரே! கொன்னுட்டே! பேசாம நீயே சினிமால நடிக்கலாம் நைனா."

இப்படியும் இன்னும் இது மாதிரியும், சுற்றியிருந்தவர்கள் முத்து மனத்தில் போட்ட விதை விஸ்வரூபமெடுத்து ஒரு சுபயோக சுபதினத்தில் அவன் வீட்டைவிட்டுப் பத்து ரூபாய்ச்சில்லறையைப் பெருங்காய டப்பாவில் இருந்து எடுத்துக் கொண்டு பட்டணத்துக்குக் கம்பி நீட்டினான்.

சினிமாவில் நடிக்கவும், ரஜனியைப் பார்க்கவும் நடந்தே வந்து விடாமுயற்சியாய் கூர்க்காவிடம் போராடி சத்யாக்கிரகம் இருந்து...

டொய்ங்.... டொய்ங்..... டொய்ங்....

**"மு**த்து உன் கதை ரொம்ப உருக்கமா இருக்கு" ரஜனி கண்களில் நீரைத் தேடினான். பழக்க தோஷத்தால் கிளிசரின் இல்லாமல் நீர் வர மறுத்தது.

"உனக்கு இப்ப என்ன வேணும் கேள்."

"சார், நானும் உங்களாட்டம் ஆக்ட் தரணும். சண்டை போடணும். பாடணும். கார் ஓட்டணும்."

முத்துவின் கண்களிலும் வார்த்தைகளிலும் ஒரு வேகத்தைக் ரஜனி கண்டான். அவன்



வேக மனம் உடனே ஒரு கணக்குப் போட்டது. செக்ரட்டரியைக் கூப்பிட்டு: ''முத்துவை உடனே 'ஓவரால்' பண்ணி புது டிரஸ் வாங்கிக் கொடு. ரெண்டு நாளைக்கு என் கூடவே இருக்கப் போறான் பையன். O.K. done.''

இந்தப் பொறுக்கிப் பையனைக் கூடவே வச்சுக்கப் போறாரு? என்னாச்சு இவருக்கு? வழக்கம்போல கஜனியின் செயல்களுக்கு அர்த்தம் புரியாத செக்ரட்டரி கட்டளையை நிறைவேற்ற ஓடினான்.

மணி பத்து. பர்த்டே பார்ட்டி. அலங்கார அறை. பூக்கள் கலர் கலராய் வண்ண விளக்குகள். குளிரிய ஏ.ஸி. அறையின் நட்ட நடு சென்டரில்( தாங்க்யூ இரவிச்சந்திரன்) பெரிய 'பருந்து' மாதிரி கேக். சுற்றிலும் காக்கா மாதிரி கூட்டம். பெரிய பெரிய நடிகைகளும், நடிகர்களும்வந்தார்கள். கண் கொள்ளா முத்து பிரமித்து நின்றான்.

எல்லோரும் பாட கஜனி கேக்கை வெட்டி முத்துவைத் தேடி அவன் வாயில் முதல் கேக் துண்டைச் செருகினான்.

யார் இந்தப் பையன்?

பிரபல நிருபர் கலன் உடனே தன் பத்திரிகைக்குக் கிசுகிசு உற்பத்தி செய்தார். 'கஜனி ரகசியத் திருமணமா? முதல் மனைவி மூலம் 12 வயதுப் பையன். முதல் மனைவி விவாகரத்தா?'

பார்ட்டி முடியாத கையோடு பல போன் கால்கள் கஜனியை அழைத்தன. கதாநாயகி வியர்வையில் மேக்கப் கலைய' வாடிப் போகிறாளாம். எட்டாவது ஃப்ளோரில் நடிகை தும்பிகா பிரபாகரை விவாகரத்து செய்துவிட்டு ஆறாவது ஃப்ளோரில் தான் பெற்ற குழந்தையுடன் அப்பா கஜனி வருகைக்காக லிப்ஸ்டிக் தடவிக் கொண்டு காத்திருந்தாள்.

பார்ட்டியில் பாதியைக் கான்ஸல் செய்த கஜனி, முத்துவுடன் 'சள்ளுபுள்ளு' படத்துக்கான ஷூட்டிங் போனான். கஜனியைக் கண்டதும் காத்திருந்தவர்கள் முகத்தில் பூ மலர்ந்தது. (ராஜேந்திர குமார் கவனிக்க)

சண்டைக் காட்சி. கஜனி வில்லன் முன் போய் சட்டையை உலுக்கினான். வில்லன் ஓங்கி ஒரு. கும்மாங் குத்து உண்மையாய்க் கொடுத்தான். இவ்வளவு நேரம் காத்திருந்த கோபம். கஜனி வாயைப் பிளந்து கொண்டு சேரில் சாய்ந்தான்.

பார்த்துக் கொண்டிருந்த முத்துவுக்குக் கோபம் எகிறியது. பாய்ந்து வில்லனைக் கிழித்துப் போடலாமா? ஸ்பானர் இருந்தால் வில்லனின் பொட்டில் பட்டென்று விட்டிருப்பான். எல்லாம்கெட்டுப் போச்சு. கஜனிக்கு என்னாச்சு? கராத்தேலே ரெண்டுவெட்டுத்தந்தா வில்லன்கவுந்துட மாட்டானா? ஏன் இவர் பயந்து ஒக்கார்ந்துட்டார்?



முத்து மெதுவா காதில் ''சார்! திரும்ப அடிக்காம விட்டிருக்கக் கூடாது'' என்றான் பொய்க் கோபத்தோடு.

அதற்குள் இன்னொரு கஜனி அதே டிரஸ் ஸில் வந்து, வில்லனை உதைத்து, குதித்து, எம்பி, கரணம் போட்டு, மரணம் தப்பி, டேன்ஸ் ஆடி, தூள் கிளப்பினான். முத்து இரண்டு கஜனியையும் மாறி மாறிப் பார்த் தான். உட்கார்ந்திருந்த கஜனியைக் கிள்ளிப் பார்த்தான்.

''முத்து எனக்குச் சண்டை தெரியாது. உண்மையா எனக்காகச் சண்டை போடறது அவன்தான். அவன் என் டூப்.'' இவ்வளவு தானா? முத்துவுக்கு கஜனி சப்பென்றானான்.

''இங்க பாரு சார்! இந்த உலகத்தில நத்திங் இஸ் இம்பாஸிபிள். உங்க மகளை அடைஞ்சே தீருவேன்.''

''இங்க பாரு ஸார்! இந்த உலகத்ல நத்திங் சஸ் இம்பாஸிபிள். உங்க மகளை அடைஞ்சே தீருவேன்.''

''இங்க பாரு சார்! இந்த உலகத்ல நத்திங் ஈஸ் இம்பாஸிபிள். உங்க மகளை அடைஞ்சே தீருவேன்.''

''இங்க பாரு சார்! இந்த உலகத்ல நத்திங் ஈஸ் இம்பாஸிபிள். உங்க மகளை அடைஞ்சே தீருவேன்.''

கஜனி வசனம் நாலாவது டேக்கில்தான் ஓ.கே.வானது. முத்துவுக்கு உலக மகா கபாரடித்தது. அடுத்த சீனில் இரட்டை வேட ஜேனி. ஹேர்ஸ்டைல் வேற மாதிரி. மேக்கப் ரூமுக்குள் முத்துவும் போனான். மேக்கப் மேன் புது டோப்பா கொண்டு வந்து கஜனி தலையிலிருந்ததைக் கழற்றி – மொட்டைத் தலை! – புதியதை மாட்டினான்.

என்னது கஜனி மொட்டையா? பொய்! எல்லாம் பொய்! மயிர்கூடப் பொய்தானா? இந்த கிராப் ஸ்டைலுக்காகவே கஜனியைத் துதிக்க ஆரம்பித்த முத்து உடைந்துபோனான்.

''என்ன முத்து பார்க்கறே. கண்ணால பாக்கறதும் பொய். காதால கேக்கறதும் பொய். தீர விசாரிக்கிறதும் பொய். அது தான் உலகம். இந்த உலகத்தில குனியக் கூடாது. உலகத்து மேல நீ நிக்கணும்.'' கஜனியின் தத்துவம்முத்துவுக்குப் புரியவில்லை!

''என்னது? காற்று நன்றாக அடிக்கிறதே என்று கவலைப்படு கிறாயா? இதிலேகவலைப்பட என்ன இருக்கிறது...?''

''காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ள ஒன்றுமில்லையே என்று தான் கவலைப்படுகிறேன்...!''

–பெ. கலாசாமி.



மாறுவேட கஜனி ஸ்டுடியோவில் இருந்த ஓடாத காரில் அமர்ந்து – ஷாட் 5 டேக் 2 கிளாப் – ஸ்டியரிங் உடையுமளவு திருப்பித் திருப்பினான் – இப்படியும் அப்படியும். அடிக் கடி பின்னால் துரத்தாத காரைத் திரும்பிப் பார்த்துக் கொண்டான்.

''என்ன சார், கார் ஓடவேயில்லே?'' டேக் முடிந்து முத்து வினவ,

''எனக்குக் கார் ஓட்டத் தெரியாதப்பா. எல்லாம் நடிப்பு. பிற்பாடு டூப் ஓட்டுவான். எல்லாம் மாயம். கனவு. கனவுத் தொழிற் சாலே (Thanks to சுஜாதா) இது. அவ்வளவு தான். தொட்டால் சுடும். தூர இருந்தால் குளிரச் செய்யும்.''

சே! எல்லாம் டூப்தானா? 'இல்லாதவன்' படத்ல நாலு லாரிக்கு நடுவில கார்ல பாய்ந்து பாய்ந்து தாவுர டக்கர் சீன் எல்லாம் பொய் தானா?

அடுத்த சீனில், பாடல் காட்சிக்கான வாயசைப்பு. கஜனி காமிராவைப் பார்த்துக் கண்ணடித்து வாயை மெல்ல அசைக்க பக்கத் தில் ஸ்பீக்கரில் எஸ். பி. பி.. ''கண்ணடித் துப் பார்த்தா கட்டழகுப் பாப்பா'' என்று அலறிக் கொண்டிருக்க.. சே! கஜனிக்குப் பாடக் கூடத் தெரியாதா?

அன்றிரவு ஏகப்பட்ட உணவு வகையினால் முத்துவுக்கு வயிறு கெட்டு, தூக்கம் பறி போனது. சிந்தனை மனத்தில் குடைந்தது. அரை மணி நேரக் கனவில் அம்மா வந்தாள். கையில் மோர் சாதம் பிசைந்து ஊட்டினாள். கடிச்சிக்க மாவடு தந்தாள்.

அம்மா!

சாப்பாட்டுக்கு இப்ப என்ன பண்ணுவாள்?

அடுத்த நாள் காலே ''சார் நான் சினிமால சேரல. சினிமா பிடிக்கல. எல்லாம் பொய்யா இருக்கு. ஊர்ல அம்மா கஷ்டப்படும். நான் ஊருக்கே போறேன் சார்.''

கஜனி தன் திட்டம் பலித்ததில் மகிழ்ந் தான். செக்ரட்டரியைக் கூப்பிட்டு முத்து பேரில் பத்தாயிரம் ரூபாய் டெபாஸிட் – அவன்படிப்புக்காகச்செய்ய உத்தரவிட்டான்.

''முத்து ஊர்ல போய் நல்லாப் படிக்க ணும். படிச்சப்பெரிய என்ஜினியரா வரணும். அம்மாக்கு வீடு கட்டித் தரணும். அம்மா வோட சண்டை போடக் கூடாது. அம்மாவை எப்போதும் காப்பாத்தணும். சந்தோஷமா வெச்சிக்கணும். உட்டுட்டு ஓடிடக்கூடாது. என்ன? போய்ட்டு வா.''

இதைச் சொல்வதற்குள் கஜனியின் மனம் உடைந்து போனது. பதினைந்து வருடம் முன்னால் இதே மாதிரி தன் அம்மாவை விட்டு நடிக்க ஓடிவந்ததும், அநாதரவாய்த் தன் அம்மா இறந்து போனதும் கஜனியின் மனசில் கீறிவிட்டன.

இப்பக் கோடியாய்ப் பணமிருந்தும் ஆசை யான அம்மா இல்லே. அவளை வாங்க முடிய வில்லே. இதைப் போல அன்றைக்குத் தனக்கு யாரேனும் உதவி செய்திருந்தால் தன் வாழ்க்கை எப்படி மகிழ்ந்திருக்கும் என்று நினைத்த கஜனியின் கண்ணில் நீர் வழிந்தது– கிளிசரின் இல்லாமல்!

# முத்தான முதல் சில மாதங்களுக்கு...






# இலவசம்!

## :.பாரெக்ஸ்—குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்

16 பக்கங்கள் அடங்கிய அரிய சிறுபுத்தகம், குழந்தைப் பராமரிப்பு பற்றியது இது—பால் புகட்டுதல், பல் முளைத்தல், வளர்ச்சி, அம்மைக்குத்துதல். இன்னும் பலவற்றைப் பற்றியும் விளக்குகிறது.

உங்கள் பிரதிக்கு 50 பைசா தபால் தலையுடன் எழுதுங்கள்:
த.பெ. எண் 19119 (FAR 202 x)
பம்பாய் 400 025.




டாக்டர்கள் சிபாரிசு செய்வது :.பாரெக்ஸ், குழந்தையின் விரைந்த முழு வளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு.

CASGLF-24-203

# வேலைக்குப் போகும் பெண்

நடிப்பு:
டணால் தங்கவேலு

கதை:
சாருகேசி, தமயந்தி

சித்திரம்:
செல்லம்

போட்டோ: உத்ரா

2

















என்ன சொல்றார்; மாப்பிள்ளை?
அதுக்குள்ள மாப்பிள்ளையா! ஐயோ!
பொண்ணு ஜெர்மன், பிரெஞ்ச் பாஷை யெல்லாம் படிச்சி ருக்கா? காலேஜ் படிப்போட சரியா?
ஏன்டா, நீ வீட்டுல பிரெஞ்சு தான் பேசறியோ?
அது இல்லேம்மா, நானெதுக்கே என்னை பாரீஸ்வாசிங்கு மாத்திட்டாங்கன்னு வைவி.
பாரீஸ் காரனர் லேயே இப்ப தமிழ், பிரெஞ்ச் மாதிரி தான் பேசறாங்களாம்! ஒண்ணுமே புரிய றதில்லியாம்!
நான் பி.ஏ. முடிச்சு உடனே பிரெஞ்சும் கத்துக்கிட்டேன், ஜெர்மனும் கத்துக் கிட்டேன் அத்தை!
இதியா, அத்தைன்னுப் புட்டாளே? அப்பா, நான் சொன்னது ஞாபகம் இருக்கா? என்னை நீங்கதான் காப்பாத் தணும்.
ஏன்டா கிணத்துல விழுந்த வன் மாதிரி காப்பாத்து காப்பாத்துங்கறே? விஷயத்தை உடைச்சு சொல்லு ரகசியமா!
அப்பா, என் காதலி இமயமு காத்துக்கிட் டிருக்கா எனக் காக!
எங்க காத்துக் கிட்டிருக்கா? பார்க்லயா? பஸ் ஸ்டாப்பிலயா? புறப்படு சொல்றேன்!
தொடரும்

# துணுக்..!

### மரியாதை

திரு. உ. வே. சாமிநாத அய்யர் அவர்கள் தம்முடைய ஆசான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் ஊருக்குள் செல்லும்போது, செருப்பு அணிந்து செல்வதில்லையாம்!

-எஸ். பொன்னுசாமி

### ''ஒரே மலர்!''

புது வருட வாழ்த்து வாங்கக் கடைக்கு வந்தான் ஓர் இளைஞன். ''என் இதயத்தில் குடி கொண்ட ஒரே மலர்'' என்று எழுதியிருந்த வாழ்த்துக்களில் பத்து வாங்கிச் சென்றான்.

எம். தேவராஜ் பட்டேல்

### 28ம் நேருவும்

ஜவாஹர்லால் நேருவின் வாழ்க்கையில் 28 மிகவும் முக்கியத்துவம் பெற்றிருப்பதைக் கவனியுங்கள்...

1. ஜவாஹர்லால் நேரு பிறந்த போது அவருடைய தந்தையின் வயது 28.

2. இந்திரா காந்தி பிறந்த போது நேருஜிக்கு வயது 28.

3. நேருஜியின் மனைவி கமலா மறைந்ததினம் 1936-ம் ஆண்டு பிப்ரவரி 28-ம் தேதி.

4. நேருஜி காலமான நாள் மே 27-ம் தேதி. எனினும் அவரது தகனக்கிரியை மே 28-ம் தேதிதான் நடைபெற்றது.

5. தம் மனைவியுடன் நேருஜி வாழ்ந்த வருடங்கள் 20 தான் என்றாலும் மனைவி இறந்தபின் அவர் வாழ்ந்த வருடங்கள் 28.

—பால. வீரப்பா





றுக் கொடுப்
ற போக்கில்
படியா காது
யக் கற்றுக்
ம்!"



ா?"



"டிரைவிங் கத்துக்கணும்னு வேகமாகத் தள்ளுங்க! நீங்கள் கொடுக்கும் பீஸ் பணத்தில் பெட்ரோல் ஊற்றிக் கட்டுப்படி யாகாது!"




"போனமாதம்தானே, கார்வாங்க 'லோன்' கொடுத்தேன். இப்பொழுது ஏன்வந்து நிற்கிறாய்?"
"பெட்ரோல் வாங்க 'லோன்' வேணும்!"

ஊே ஒலேக்கு
தே கிலோ
டைக்கும்?"



"ஐயோ பாவம்.... அவர் கார் வைத்திருக்கிறார்...!"

JONES

# துணுக்குகளில் கூடவா ஆபாசம்?

## கடுகு பதில்கள்



⌘ க. ராமசந்திரன், மதுரை-19

கே. ஜப்பானில் பிறந்த சோம்பேறி, இந்தியாவில் பிறந்த சுறுசுறுப்பாளி — ஒப்பிடவும்

ப: இரண்டும் சமம்!

⌘ சி. சுந்தரராமம், மேட்டுப்பாளையம்

கே. அப்பாவி, அம்மாமி - ஒப்பிடவும்

ப: அம்மாமியின் கணவர் அப்பாவி.

⌘ ஆர். பூ. சந்திரபோஸ், துறையூர்

கே. உலக அழகியின் கனவில் நீர் தோன்றித் தொல்லை தருகிறீராமே?

ப: உமக்கு யார் சொன்னது? உலக அழகி உங்களுக்குப் பரிச்சயம் போலிருக்கிறதே! இப்படியெல்லாம் வதந்தி பரப்பினால் உம்மேல் கேஸ் போட்டாலும் போடுவேன். நிற்க. ஒரு துண்டுச் சேதியைச் சொல்லுகிறேன். பாகிஸ்தான் டெஸ்ட் கிரிக்கெட் வீரர், ''தானக்'' என்ற உருது மாத இதழின் மேல் கேஸ் போட்டிருக்கிறார்-பொய்யான பேட்டிக் கட்டுரையை வெளியிட்டிருப்பதாக. அதில் வந்த ஒரு கேள்வி — பதில்: நடு ராத்திரி உங்கள் வீட்டுக் கதவை சோபியா லாரென் தட்டினால் என்ன செய்வீர்கள்? என் பெட்ஷீட்டை அவளுக்குக் கொடுத்து விட்டு, கதவைப் படார் என்று மூடி விடுவேன்!

⌘ ஆர். கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்

கே. தமிழில் நகைச்சுவை எழுத்தாளர்களுக்குப் பஞ்சமா?

ப: ஆம். ஆம். நம்மவர்களுக்கு நகைச்சுவை உணர்வு அதிகம். நாலு பேர் சேர்ந்தால் சிரிப்பும் ஜோக்கும்தான். ஆனால் எழுதத்தான் ஆள் பஞ்சமாக இருக்கிறது. அதாவது பேச்சுத் தமிழில் நகைச் சுவை செழித்திருக்கிறது: எழுத்துத் தமிழில் பற்றாக்குறைதான்.

⌘ எம். குமார், செவந்தலிங்கபுரம்

கே. வட்டமேஜையில் கடுகு பதிலுக்கு 0.15 என்று வாசகர் மதிப்பிட்டிருக்கிறாரே?

ப: அது அச்சுப் பிழை. 1.50 என்று இருக்க வேண்டும். (உண்மையில் 1.20க்குக் கிடைக்கும் கல்கியின் மதிப்பு 2.55!)

⌘ கி. நரசிம்மன், திருவையாறு

கே. பத்திரிகைத் துணுக்குகளில் கூட ஆபாசம் மிகுந்து விட்டதே?

ப: கதையில், படத்தில், ஜோக்கில், துணுக்கில் என்று படிப் படியாக வருகிறது. 'சன்' என்ற லண்டன் தினசரியில் தினமும் ஒரு பட ஜோக் வருகிறது. ஜியார்ஜ், லின் தம்பதிகள் என்ற தலைப்பில். ஜோக்குகள் சாதாரணம். பல புராதனம். ஆனாலும் அதைப் பலர் படிப்பதற்குக் காரணம் அதில் லின் பிறந்த மேனியாகத்தான் இருப்பாள். டிரஸ் பண்ணிக் கொள்வது மாதிரி, மாற்றிக் கொள்வது மாதிரி அல்லது அவிழ்ப்பதுமாதிரி இப்படித்தான் படம் இருக்கும். நாமும் லண்டன் மாதிரி முன்னேறிக் கொண்டிருக்கிறோமோ!

பரிசு பெறுபவர் :

கி. நரசிம்மன்
8, சாமராயர் அக்ரகாரம்,
திருவையாறு - 613204



“இன்னும் ரெண்டுநாளைக்குத்தான் அரிசி வரும். முன்கூட்டியே சொல்லிட்டேன். ஏன் மொதல்லியே சொல்லலைன்னு எரிஞ்சு விழாதீங்க'' என்றாள் விமலா, முறத்தில் அரிசி கொட்டியபடி.

நாளிதழில் மூழ்கியிருந்த ரகுராமனுக்குச் சற்று எரிச்சல் கிளர்ந்தது. இருந்தும் காலையில் அடக்கிக் கொள்ள வேண்டும் என்ற விவேகத்துடன் ''என்ன விமலா, இன்னைக்குத் தேதி இருபத்தி ஏழு. இன்னும் மூணு நாளு இருக்கே சம்பளத்துக்கு. இப்பப் போயி எப்படி அரிசி வாங்கறது? மாசம் ரெண்டு தரமா சம்பளம் தர்றான்?'' என்று மெல்லிய குரலில் சொன்னான்.

''நானு சம்பாதிக்கிறேன்? நீங்கதானே ஏற்பாடு செய்யணும்? எங்க பெரியம்மாவும் புள்ளைகளும் ஒரு வாரம் இருந்துட்டுப் போனாங்க. அதுல தீந்திடுச்சுன்னு சொல்லுவிங்க.''

''இங்க பார் விமலா. நான் பேசாததைக் கற்பனை பண்ணிக்காதே.''

''சரி, அரிசிக்கு எங்கே போறது?''

''மீனாட்சியவுங்க அம்மா கிட்டச் சொல்லி நாடார் கடைல வேணுங்கிற அரிசி வாங்கிக்க.''

''கடனா?''

''ம்.''

''நான் வாங்க மாட்டேன். எனக்கு என்னவோ போலிருக்கு.''

''விமலா எனக்கும்தான் என்னவோ போலிருக்கு. இருந்தாலும் அரிசி வயிறு சம்பந்தமான விஷயம். சும்மா கேக்கலை. கடனாத்தான் கேக்கறோம்.''

''நீங்க இந்த மாசம் சம்பளத்துல அம்பது ரூபா எடுத்துட்டுத்தான் குடுத்தீங்க. அது இருந்தாலும் இப்ப ஒருத்தர் கிட்டப் போய் நிக்க வேண்டாம்.''

''அந்த அம்பது ரூபாயை நான் ஒண்ணும் வேஸ்ட் பண்ணலையே? பி. காம் எக்ஸாம் பீஸ் கட்ட வாங்கின கடன்தான். இப்பத்தான் அடைக்க முடிஞ்சுது.''

''இத்தனை கஷ்டப்பட்டு பி. காம் படிச்சு ஆபீஸ்ல ஆயிரமா கொட்டிக் கொடுத்தான்? எழுபத்தி அஞ்சு ரூபா இன்சென்டிவ் இன்க்ரிமெண்ட் குடுத்தான். இந்த வருஷம் எம். காம் படிக்கோணும்னு வேறே சொல்லிக் கிட்டிருக்கீங்க.''

''சொல்லிக்கிட்டிருக்கீங்க என்ன? அப்ளிகேஷன் வாங்கிப் பூர்த்தி பண்ணி வச்சிருக்கேன். பி. காம் டிகிரி சர்டிபிகேட்டுக்கு அட்டஸ்டேஷன் வாங்கினாப் போதும்.''



# அட்டஸ்டேஷன்

## பிரதிபா ராஜகோபாலன்

''ஆமா, மறந்துட்டேன், நீங்க முந்தி வாங்கின பி.எஸ்ஸி டிகிரிக்கு ஏதாவது இன்கிரிமெண்ட் குடுக்க மாட்டாங்களா?''

ரகுராமன் அவளைச் சட்டென முறைத்துப் பார்த்தான்.

''இதைச் சொன்னா மட்டும் சுருக்குன்னு கோபம் வரது. எவளோ ஒருத்தி பின்னால சுத்திகிட்டு, அவளை நம்பி வாழ்க்கையை, நாசமும் பண்ணிட்டு, இப்ப அரிசி இல்லே பருப்பு இல்லேன்னு அல்லாட வேண்டியிருக்கு!''

''விமலா, அதப் பத்திப் பேச வேண்டாம்னு எத்தனை தடவை சொல்லியாச்சு?''

''பேசக் கூடாதுதாங்க. ஆனா என்ற மனசு கேக்கலியே. அவளாலே, படிப்புப் போச்சு, பெத்தவங்க அன்பு போச்சு, சொத்து போச்சு வாழ்க்கைல நல்ல விஷயங்கள் எல்லாம் போச்சு. இப்ப வெடிய வெடியப் படிச்சு உடம்பு கெடுத்துக்க வேண்டியதாப் போச்சேன்னு நான் மனசு வேதனைப்படுது.''

''நான் எல்லாம் உணர்ந்துதான் வெச்சிருக்கேன். உனக்கும், நம்ம குழந்தைகளுக்கும்தான் இப்பிடி உழைக்கிறேன். அவங்க வாழ்க்கையாவது என் மாதிரி ஆகாம சந்தோஷமா சௌகரியமா இருக்கணும். மத்தபடி எனக்கு எந்தவித நஷ்டமும் இல்லே. நீ மனைவியா வந்ததே என் எல்லா வித நஷ்டத்தையும் சரிக்கட்டிடுச்சு விமல்.''

விமலா அவனையே பார்த்தாள்.

ரகு. எம்.எஸ்.ஸி. முதல் வருடம் படித்துக்கொண்டிருக்கையில் ஷைலஜாவின் காதலுக்கு உள்ளானான்.

அவனுடைய கல்லூரியில் நடந்த ஒரு கண்காட்சியில் அவள் தன் தோழிகளுடன் வந்திருந்தாள். அதே நகரில் பெண்கள் கல்லூரியில் பி.எஸ்ஸி. இறுதி ஆண்டு படித்துக் கொண்டிருந்தாள். வந்திருந்த பெண்களிலே நடுநாயகமாய், எல்லார் மனசையும் ஈர்ப்பவளாய் இருந்தாள்.

ரகு, அன்றிரவே மனப் பிறழ்ச்சியுடன் அவளுக்காகவே பிறந்தவன் போல் கற்பனை செய்து கொண்டு புரண்டான். மூன்றாவது நாள், ரொம்ப இயல்பாக, அவளுக்காக வருடக் கணக்காகக் காத்திருப்பவன் போல் அவள் கல்லூரி வாசலில் போய் நின்றான். கொஞ்ச தூரம் நடந்தார்கள். அவனைத் தெரிந்து கொண்டு அவள் பேசினாள். எதிரே தெரிந்த ஹோட்டல் விளஸின் குடும்ப அறையில் சாப்பிட்டார்கள்.

மறுபடியும் வந்த வழி திரும்பி, ரேஸ் கோர்ஸ் வந்து அப்போது இருந்த தாமஸ் பார்க்கில் உட்கார்ந்து இருட்டும் வரை பேசினார்கள்.

இவர்கள் காதல் மற்ற மாணவர்களுக்குத் தெரிந்தது. ரகுவின் தந்தைக்கும் தெரிந்து விட்டது.

ஹாஸ்டலுக்கு வந்து விசாரித்தார். உண்மையை உறுதி செய்து கொண்டார்.

''உனக்கு இது சரின்னு படுதா?''

''படுதுங்க.''

''அந்தப் புள்ளை ஒரு மாதிரின்னு சொல்றாங்களே.''

''ஒரு மாதிரின்னா?''

''உம்மாதிரி காசு உள்ள பசங்களாப் பார்த்துப் பழகுவாளாம். கறக்கிறவரைக்கும் கறந்துட்டு விட்டுடுவாளாம். இது வரைக்கும் நாலு பசங்களாச்சாம்...''

''யாரு சொன்னா?''

''விசாரிச்சேன். விசாரிச்ச அளவு எல்லாரும்தான் சொன்னாங்க.''

''இத பாருங்க. அந்தப் பொண்ணு ரொம்ப அழகு. படிப்பிலே யுனிவர்ஸிடிலே பர்ஸ்ட்டா வருவா. இந்தப் பசங்க அவ ரேஞ்சுக்கு நோட்டுக்குக்கூடக் கட்டி வர மாட்டானுக. பொறாமைல சொல்றானுக. நான் அந்தப் பொண்ணைத்தான் கட்டிக்கப் போறேன்.''

''அவ நம்ம சாதிகூட இல்லே....''

''அதப் பத்தி நான் நெனைச்சுக்கூடப் பார்க்கல்லே.''

''உன் முடிவு இதுதானா?''

''ஆமாப்பா.''

''அப்படியா?... இப்ப இருக்கிற சொத்து நான் தலையெடுத்து நானாச் சம்பாதிச்சது. அத என்ன வேணாலும் பண்றதுக்கு எனக்கு பவர் இருக்கு.''

''சொத்து எனக்கில்லேன்னு சொல்றீங்க?''

''ஆமாம்.''

''ரொம்ப சந்தோஷம்.''

அவர் போய்விட்டார்.

போன பத்தாம் நாளே, சொத்தை இரு மகள்களுக்கும், உள்ளூர் காமாட்சியம்மன் கோயிலுக்கும் எழுதி வைத்து விட்டார்.

ரகு, ஷைலஜாவிடம் நடந்ததைச் சொன்னான். மௌனமாகக் கேட்டுக் கொண்டாள்.

''இந்தக் காலத்துல பணம் இல்லேன்னு அவனவன் பஞ்சமா பாதகம் எல்லாம் பண்றான். நீங்க, உங்கப்பாவிடம் கொஞ்சம் அட்ஜஸ்டபிளா பேசி இருக்கணும்.''

''என்ன சொல்றே ஷைல்?''

''பிராக்டிக்கலா வாழ்க்கையைப் பத்தி உங்களுக்கு ஒண்ணும் தெரியல. அப்பா தன் நெலேல பிடிவாதமா இருக்கிறார்னு தெரிஞ்சதும், 'சரிப்பா, ஏதோ நடந்து போச்சு'ன்னு மன்னிப்புக் கேட்க வேண்டியதுதானே? அவரும் சமாதானமாப்போயிருப்

பாண்டியில் நிறைய ஆட்டோரிக்ஷாக்கள் உள்ளன.

ஆனால்.... பட்டாணி கடை டு கோரி மேடு.... ஒரு நபருக்கு 75 பைசா கட்டணம் என்ற விகிதத்தில்தான் ஓட்டுகிறார்கள் - பஸ் ரூட் போல!

-க.க. ரங்கநாதன்



பாரு. படிப்பு முடிஞ்சதும் ஒரு நாள், மனசறிஞ்சு பக்குவமா சொல்லிக் கல்யாணத்துக்கு ஒப்புதல் கேட்டிருக்கலாம். நான் அதுவரை ஓடியா போயிடறேன்?''

''என்ன சொல்றே ஷைல்?''

''உங்களை நம்பறதுலே அர்த்தமில்லேன்னு தோணுது. என்னை மறந்துடலாம்.''

''ஷைல்....''

அவள் எழுந்து போய்விட்டாள். அவளைப் பற்றி அப்பா சொன்னது சரிதானோ?

அதற்குப் பின் அவன் பகீரதப் பிரயத்தனம் செய்து பார்த்தான். அவளுடன் பேச முடியவில்லை. எத்தனையோ முறை கல்லூரி வாசலுக்குப் போய்க் காத்திருந்தான். லட்சியமே செய்யவில்லை அவள். ஒரு நாள், ஆத்திரப்பட்டு, பஸ் ஸ்டாண்டில் அத்தனை பேர் முன்னிலையிலும் அவள் கையைப் பிடித்து ''என்னைத் தெரியலையா ஷைல்?'' என்று இழுத்து விட்டான். அவள் உடனே, ''ப்ளடி ரோக்! என்னை எதுக்குத் தொட்டே?'' என்று பளாரென்று அறைந்து விட்டாள். சுற்றி இருந்த அத்தனை பேரும் அவனைத் துவைத்து விட்டனர்.

அன்றுதான் மனத்திலிருந்த அவள் காதலைத் தூக்கி எறிந்தான். கல்லூரியில் எல்லோருக்கும் தெரிந்து மிகவும் கேவலமாகப் போய்விட்டது. படிப்பு நின்றது. ஒரு நண்பனின் உதவியினால் இப்போது இருக்கிற வேலை கிடைத்தது. பெற்றோர் அவனைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. அவனும் அந்த நகரிலிருந்து நாக்பூருக்குப் போய் வேலையில் சேர்ந்து விட்டான். அப்புறம் நண்பரின் தங்கையையே திருமணம் செய்து கொண்டான். இந்த ஆறு வருடத்தில் இரண்டு பையன்கள், ஒரு பெண்.

பல ஊர்களுக்கு டிரான்ஸ்பராகி, போன மாதம்தான் இந்த ஊருக்கு வந்தான்.

ஆபிஸில் பி.காம், எம். காம் படித்தவர்களுக்கு இன்சென்டிவ் இன்க்ரிமெண்டும், பதவி உயர்வும் கிடைக்க வழி இருந்தது.

அதனால் தபாலில் படித்து பி. காம் பாஸ் பண்ணினான். இப்போது எம். காம் படிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் தீவிரமாக இருந்தான்.

பதினொரு மணிக்கு சப் கலெக்டர் ஆபீஸில் இருக்கும் ஒரு நண்பனுக்குப் போன் செய்தான்.

''கெஜடட் ஆபீசர் ஒருத்தர்கிட்ட அட்டஸ்டேஷன் வாங்கணும்பா. லஞ்ச் டைமுக்கு வர்றேன். யார் கிட்டயாவது வாங்கிக் குடு.''

''இப்ப வாப்பா. லஞ்ச் டைம்ல யார் இருப்பா?''

''ஒன் அவர் பர்மிஷன் போட்டுட்டு வர்றேன். நாளைக்குத்தான் அப்ளிகேஷனை அனுப்பக் கடைசி நாள்.''

''அதுதான் வான்னு சொல்றேனே?''

அவன் நண்பனின் செக்ஷனுக்குப்போனான்.

''இப்பத்தான் எங்க ஆபீசரு வெளியே கிளம்பினாரு. இல்லேன்னா அவர் கிட்டயே வாங்கி இருக்கலாம். சரி, சப் கலெக்டர்



அவள்: ''எங்கப்பா நம் திருமணத்துக்குச் சம்மதிச்சுட்டார். உங்கப்பா..?''

அவன்: ''ஹூம் அவரும் தான் சம்மதிச்சுத் தொலைச்சுட்டார்!''

உ. ராஜாஜி

இருக்காங்க. வாங்கித் தர்றேன்'' என்றவன், அவனுடைய சர்ட்டிபிகேட்டைச் சரிபார்த்து இனிஷியல் பண்ணி உள்ளே அழைத்துக் கொண்டு போனான்.

மாடியில் சப் கலெக்டரின் அறைக்கு முன்னால் நின்றிருந்த அட்டெண்டரைக் கூப்பிட்டான்.

''ஏம்ப்பா சன்னாசி! அம்மா இருக்காங்களா?''

''இருக்காங்க சார்.''

''அட்டஸ்டேஷன் ஒண்ணு வாங்கணும்.''

''என்னப்பா இதுக்கெல்லாம் போய், சப்கலெக்டர் கிட்ட வாங்கிட்டு? ஒரு பி.டி.ஓ. கிடைச்சாக்கூடப் போதும்'' என்று இடைமறித்தான் ரகு.

''அம்மா ரொம்ப நல்ல மனசு சார். தப்பா நெனைக்க மாட்டாங்க. குடுங்க.'' என்று சர்டிபிகேட்டை வாங்கிக்கொண்டு போனார் சன்னாசி.

''ஏம்பா, சப் கலெக்டர் லேடியா?''

''ம்.''

''பேரு?''

''ஷைலஜா. இன்னும் கல்யாணம் ஆகலே. இதோ பார் இந்தப் போஸ்டர்லே அவங்க போட்டோ இருக்கு'' என்றவன், எதிர்ச் சுவரிலிருந்த போஸ்டரைக் காண்பித்தான்.

அனாதைப் பெண்களுக்குத் தையல் இயந்திரம் வழங்கும் விழா சம்பந்தமாக அந்தப் போஸ்டரில் சப் கலெக்டர் ஷைலஜா சிரித்துக்கொண்டிருந்தாள்.

ரகு ஒரு விநாடி உறைந்து விட்டான்.

'அந்த' ஷைலஜாதான் இந்த ஷைலஜா.

தன் தலையெழுத்தையே மாற்றியவளின் கையெழுத்துக்காகத்தான் நிற்கிறோம் என்பதை எண்ணியதும் ரத்தம் தன்னை விட்டு வழிந்து உடல் வெளுத்து நிற்பதாய் உணர்ந்து திகைத்தான்.

# உலகப் புகழ் பெற்ற கோனி கேஸட் டேப்களை வாங்க நான்கு முக்கிய காரணங்கள்




## ஹிஸ்ஸ்

இந்த வார்த்தையை
வெகு விரைவில்
மறந்து விடுவீர்கள்.
ஏனெனில் இம்மாதிரி
யான சீறும் சப்தத்தை
எங்கள் டேப்பில் கேட்க முடியாது.
தெளிவான சப்தத்தை கேட்பதற்காக
எங்கள் டேப்கள் வழுவழுப்பாகவும் ஒரே சீராகவும்
பூசப்பட்டது. மெல்லிய சப்தத்தையும் உச்சஸ்தாயியையும்
துல்லியமாக கேட்க முடியும்.

## கட்



ஒரு டேப்பின் கடைசி கட்டம்
தான் இது. இருப்பினும்
இதைப்பற்றி ஆரம்பத்
திலேயே கூறுவது
முக்கியமாக
கருதுகிறோம்.
கோனிகேஸட்
டேப்கள்
நீடித்து உழைப்
பவை. ஏனெனில் சக்திக்கும்
நீள் சக்திக்கும் எங்கள் டேப்
பல்வேறு சோதனைகளுக்
குட்பட்டு வருகிறது. நீங்கள் கேட்பது முதல் தடவையோ அல்லது
ஐநூறுவது தடவையோ, சப்தம் ஒன்றாகத்தானிருக்கும். துல்லியமாக,
புத்தம் புதியதாக.




கோனிகேஸட் டேப்பில் இம்மாதிரியான தொந்தரவுகளைக் காண்பது மிகவும் அரிது. ஏனெனில் நாங்கள் உபயோகிக்கும் சிலிகான் பேப்பர் அவ்வளவு வழு-வழுப்பானது. எங்கள் விசேஷ பிளாஸ்டிக் கைடு உருளைகளும் ஹப்ஸூம் டேப்பை நன்ருக ஒழுங்குபடுத்துகிறது. எனவே சிக்கல்களுக்கு இடம் கிடையாது.

# ஹெட்



பதிவுசெய்ய உபயோகிக்கும் ரெக்கார்டரின் ஹெட் இது. எங்கள் கோனிகேஸட் டேப்பின் தரம் அவ்வளவு உயர்வானது. டேப்பை உபயோகித்த பின்பு உங்கள் ரெக்கார்டரின் ஹெட்டுக்கு பாதிப்பு ஏதுமிருக்காது. கோனி டேப்கள் காந்த சக்தியை எதிர்க்கும் விசேஷ தன்மை பெற்றுள்ளதால் பதிவு செய்யும்போது குறுக்கிடும் காந்த அலைகளைத் தடுத்துவிடுகிறது.

குளிர் சாதன அறையில் டேப் அசெம்பிள் செய்யப்படுவதால் எங்கள் டேப்பில் அழுக்கு, தூசி படிவதில்லை. நீங்கள் உபயோகிக்கும்போது தொந்தரவு ஏதுமிருக்காது. எங்கள் டேப்பின் தரத்தில் நாங்கள் அளவு கடந்த நம்பிக்கை கொண்டுள்ளோம். தயாரிப்பிலுள்ள குறைபாடு களுக்கு எதிராக நாங்கள் உத்திரவாதமுமளிக்கிறோம். ரெக்கார்டர் ஹெட்டை சுத்தப்படுத்தும் விசேஷ டேப்களும் எங்களிடம் உண்டு.

## ...மீதியை உபயோகத்தில் தெரிந்து கொள்ளுங்கள். நீங்கள் வேறு எந்த டேப்பையும் வாங்க மாட்டீர்கள்.

# கோனி®

C30 C45 C60 C90

**கோனி எலெக்ட்ரானிக்ஸ் (பி) லிமிடெட்**

1/40-3, மவுண்ட் பூந்தமல்லி ரோடு, பரங்கிமலை, சென்னை-600 016. போன் : 433996

**எல்லா எலெக்ட்ரானிக் மற்றும் ரெக்கார்ட் கடைகளிலும் கிடைக்கிறது.**

C-11A-81-Tam

ஸ்டாக்கிஸ்ட் : குரு ட்ரானிக்ஸ், சென்னை. போன் : 843912

# நீயா?



சந்திரநாத்

## 8

"அய்ய — போரடிக்குது" என்றாள் நிம்மி.

மகேஷ் நிமிர்ந்து கடிகாரத்தைப் பார்த்தான். ஒன்பதரை! கமலைப் பார்த்தான். குஷியாக ஆடிக் கொண்டிருந்தார்.

எதிரே பார்த்தான். அந்த அறை அப்படியே இருந்தது.

"எனக்கு டைம் ஆயிடுச்சு பாஸ்."

"ஓ!"—நிமிர்ந்தார். "மணி ஒன்பதரை!" என்றார். "இனிமேல் உனக்கு பஸ் கிடைக்குமா? பேசாம இங்கயே தங்கிவிடேன்."

"இல்லே பாஸ்."

"வூட்லேதான் அம்மாகூட இல்லியே. போய் என்ன பண்ணப் போறே. ஆட்டம் போரடிச்சா நிறுத்திப்புடுவோம். போ, போய் எல்லாருக்கும் டிபன் பாது கொண்டா" என்றார் கமல்.

எழுந்து போய்க் கொண்டு வந்தான். லாலை உற்றுப் பார்த்தான். சாப்பிட்டார்கள். ஏப்பம் விட்டார்கள். பழங்களின் தோலைக் குவித்தார்கள்.

மீண்டும் ஒரு மணி நேரம் ஆடினார்கள். மகேஷ் சலித்தான். 'எதிர்' அறைப் பக்கம் கொலைகாரன் அண்டவே இல்லை.'

"நான் போய்ப் படுத்துக் கொள்ளட்டுமா பாஸ்."

"சரி, செய்."

வலப் பக்க அறைகள் ஒன்றுள் போய்க் கதவைச் சாத்திக் கொண்டாள். சாவித் துவாரம் வழியாக அவள் பார்ப்பதாகப் பிரமை தட்டிற்று.

கொல்லையில் ஒரு நாய் குரைத்தது. அடங்கியது.

"அங்கே என்ன பார்க்கிறீங்க?" என்றார் கமல்நாத்.

"சமையலறையிலே என்னமோ சத்தம் கேட்டது மாதிரி இல்லே?"

"பூனை ஏதாவது வந்திருக்கும். — சீட்டைக் கவனிச்சுப் போடுங்க."

அப்புறம் அந்தச் சத்தமும் இல்லை. சீட்டைக் கவனித்தான். செட்டுகள் சேர மறுத்தன. சண்டித்தனம் செய்தன. நேரத்தைத் தின்றன.

திடீரென்று சீட்டுக்கட்டை மேஜை மீது பரத்திவிட்டு எழுந்து, நிம்மியின் அறை வாசலுக்குப் போனான். சாவித் துவாரம் வழியாக உள்ளே பார்த்தான்.

உள்ளே மங்கிய ஒளியில் நிம்மி கட்டிலில் தூங்கிக் கொண்டிருந்தாள். மார்பு நிதானமாக ஏறி இறங்கிக் கொண்டிருந்தது. திரும்பி வந்தான்.

"என்ன?" என்றார் கமல்நாத்.

"தூங்கிக்கிட்டிருக்கா" என்றான்.

"அவ மேலே சந்தேகப்படறீங்களா?"

"ஒரு துப்பறிபவன், எல்லார் மேலேயும் தான் சந்தேகப்படணுங்க."

"அது ஒரு பாவமும் அறியாத பொண்ணுங்க."

"காலேலநமக்கு எத்தனைமணிக்குவண்டி?"

"ஏழரைக்கு — ஸம்மர் ஸ்பெஷல்"

"நான் நாலரைக்கு இதை விட்டுக் கிளம்பிடலாம்ல்லே?"

"ஓ!"

"சரி, இப்பத் தூங்குவோம். நான் இங்கேயே படுத்துக்கிறேன்."

"இங்கியா? பஸ்ட் கிளாஸ் ரூம்ல்லாம் மேலே இருக்குங்க."

"வாண்டாம். இங்கேதான் நல்லா காத்து வருது. நீங்க மாடியிலே தூங்குங்க. யாராவது ஏறி வந்தாக்கூட நான் இங்கேயே மடக்கிடறேன்.... பணம் பத்திரமா இருக்கு இல்லே?"

"அதுவும் சரி" என்றார் கமல்நாத். மாடி ஏறிப் போனார்.

மகேஷ் எழுந்து, லட்ரீனுக்குப் போகிறப் போலப் பின் பக்கம் போனான். வழியில் சமையலறையை எட்டிப்பார்த்தான். விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அலமாரியில் கத்தி அப்படியே இருந்தன.

வெளியே வந்தான். சில்லென்று காற்று வீசிற்று. சுற்று முற்றும் ஆள் அரவமே இல்லை. திரும்பி வந்தான். காரிடார் வெளிச்சம் 'அந்த' அறை முன் பாலாக விழுந்து கிடந்தது. போய்த் திறக்கலாமா என்று யோசித்தான்.

பின்னாலிருந்து யாரோ மறைவாகப் பார்த்துக் கொண்டிருப்பதாக உணர்ந்தான். திரும்பிப் போய் சோபாவில் படுத்துக்கொண்டான்.

தூங்காமல் விழித்திருந்தான். அறையையே கண்காணித்து வந்தான். நேரம்...ஓ...டி...க் கொண்டிருந்தது.

எச். எம். டி. நாலுக்கு வந்து, "பையா— இங்கே ஒன்றுமே நடக்கப் போவதில்லை. சும்மா உன்னைப் போக்குக் காட்டியிருக்கிறார்கள்." என்றது.

எழுந்தான். சமையலறையில் கத்திகள் அப்படியே இருந்தன. கார் ஷெட்டில் கட்டப்படாத பெட்டி இருந்தது. டீக்கடை பலகையில் மப்டி ஆசாமிகள் தூங்கி வழிந்தார்கள். பாத்ரூம் போனான். திரும்பி வந்த போது கமல்நாத் எழுந்து வந்து கொண்டிருந்தார். "நமஸ்தே லால்ஜி"

"நமஸ்தே!"

''கிளம்பிட்டீங்களா?''

''ஆமாம்.''

''சரி, போயிட்டு வாங்க. ரெண்டு நாள்ல வந்துடுவேன். பார்ப்போம்.'' — கண்ணைச் சிமிட்டினார்.

''நிம்மி—''

''என்னங்க பாஸ்?'' — கண்களைக் கசக்கிக் கொண்டு எழுந்து வந்தாள். ''ரொம்பப்பய மாயிடுச்சு — ராத்திரி. என்னென்னமோ சத்தங்கள். ஆளுங்க நடநடன்னு ஓடற மாதிரி ஓசைகள் — தூங்கவே இல்லே.''

''லால்ஜி போறாராம். டாக்ஸியிலே. நீ வேணுக் கூடப் போய் உங்க வூட்லே இறங்கிக்கிறியா?''

''இதா ஒரு நிமிஷத்திலே மூஞ்சியை அலம்பிக் கொண்டு வந்து விடுகிறேன்.''— ஓடினாள். ''நானும் குளிக்கப் போகிறே னுங்க'' கமல்நாத் நகர்ந்தார்.

தனித்திருந்தான். பளிச்சென்று ஓடிப் போய் அந்த மணக்கும் அறைக் கதவைத் தள்ளினான். திறக்க முடியவில்லை. ஏழு லீவரில் உள்ளே பூட்டிக் கொண்டிருந்தது.



திரும்பினான். டெலிபோன் அடித்தது. எடுத்தான்.

பெண் குரல் ஒன்று சொல்லிற்று. ''லால்ஜி நீயா பேசறது?''

''ஆமாம்.''

''கொலைகாரன் உஷாராயிட்டான் லால்ஜி நீ மாறு வேடத்திலே கூடவே இருந்துட்ட தாலே பிளானை மாத்திட்டான். நீ அவன் கூட மதுரை போனதும் இங்கே—'என்னைத்' தீர்த்துடப் போறாங்க.''

''நீ யார்?''

''கமலின் மனைவி.''

''எங்கிருந்து பேசறே?''

''இதே கட்டிடத்திலேர்ந்துதான். நீ அவன் கூட மதுரை போகாதே மகேஷ். இன்னி முழுக்க இங்கேயே தங்கிடறதா சொல்லிடு, மகேஷ். உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கிறேன். மகேஷ். என்னை 'சேவ்' பண்ணு மகேஷ்!''

''உன்னைக் கடவுள் காப்பாற்றுவார்.''

''ஐயோ... நீ போகத்தான் போறியா?''

'டக்'கென்று வைத்து விட்டு வெளியே வந்தான். இரண்டு நிமிஷத்தில் நிம்மி 'பளிச்' சென்று வந்தாள்.

பெட்டிக் கடை ஆள் பீடி குடித்துக் கொண்டிருந்தான். ''யாரு அவன் கடை ஆளா?'' என்றான்.

''தெரியலே'' என்றாள் நிம்மி.

''சோமாரிப் பயல். காசு கொடுத்தால் போயி ஒரு டாக்ஸி பிடிச்சிட்டு வரமாட் டான்? நீ இங்கேயே இரு.''

போனான். பீடி எழுந்து நின்றான். ரகசிய மாக, ''மப்டியா?'' என்றான்

''ஆமாங்க.''

''காலைவரை ரொம்ப உஷாராக இருங்க. சந்தேகமா எவனாவது தென்பட்டா அரஸ்ட் பண்ணிவிடுங்க.''

கிசுகிசுத்தான். ஆள் டாக்ஸி கொண்டு வரப் போனான்.

நிம்மியைச் சௌகார்பேட்டை முனையில் இறக்கி விட்டு விட்டு ஆபீசுக்கு வந்தான். டாக்ஸி ஏதாவது பின்தொடருகிறதா என்று பார்த்துக் கொண்டான்.

டிரஸ் மாற்றிக் கொண்டான். நீலா உட்கார்ந்து, அழகான விழிகளால் பெரு மூச்சு விட்டுக்கொண்டிருப்பது போலிருந்தது.

வெளியே வந்து ஐயர் கடையில் காப்பி சாப்பிட்டு விட்டு டாக்ஸியில் எழும்பூருக்கு விரைந்தான்.



**ம**ஞ்சு காத்துக் கொண்டிருந்தாள் — மகேஷுக்காக.

அவள் கட்டிலில் சம்மணமிட்டு உட்கார்ந்திருந்தாள். அவள் மடியில் ஒரு 'நியூ-கம்மர்' கால்களையும் கைகளையும் உற்சாகமாக உதைத்துக்கொண்டு கிடந்தான்.

மஞ்சு அவனைப் பார்த்துப் பெருமிதமாகச் சிரித்துக் கொண்டாள். 'அட கண்ணு! உங்க அப்பா பெரிய டிடெக்டிவாக்கும்' என்றாள்.

உடனே மகேஷை மானசிகமாக அருகில் உணர்ந்தாள். உருவமாக அருகில் நின்று, ''என்ன பையன் கிட்ட என்னமோ பேசிக்கிட்டிருக்கே'' என்றான்.

''ஒண்ணுமில்லிங்க'' நாணினாள்.

'மேடம்' என்ற குரல் கனவைக் கலைத்தது. திரும்பினாள். நர்ஸ். ''உங்களுக்கு டெலிபோன்!'' என்றாள்.

'எனக்கா?' — இறங்கிக் காலில் செருப்பை நுழைத்துக் கொண்டாள். நர்ஸ்கள்அறையை நோக்கிப் போனாள். அறை காலியாக இருந்தது.

''ஹலோ! மிஸஸ் மகேஷ் ஸ்பீக்கிங்.''

''மேடம்!'' குரல் கரகரப்பாக இருந்தது. ''உங்களைப் பார்த்தா ரொம்பப் பாவமா இருக்கு'' — பெண் குரல்.

''ஆச்சரியமாக இருக்கிறதே! என்னைப் பார்த்தா ஏன் பாவமாக இருக்க வேண்டும்? நான் நல்லாத்தானே இருக்கேன். — ஆமாம் நீ யார்?''

''இப்ப நல்லாத்தான் இருக்கே. ஆனா டே ஆஃப்டர் டுமாரோ?''

''என்ன ஆகப் போவுது?''

''நாளை மறுநாள் உன் கழுத்திலே தாலி இருக்காது மேடம்!''

''ஷட் அப்'' — கத்தினாள் மஞ்சு. ''என்ன உளர்றே?''

''உளறலே. உண்மையைச் சொன்னேன்.''

''நீ என்ன பெரிய திரிகால ஞானியா?''

''புவர் கேர்ள்'' — சிரித்தது குரல். ''அதை நாளைத் தெரிந்து கொள்வாய். இப்ப, உன் வெல் விஷர் சொல்றேன். கேட்டு அதன்படி நடந்தால் உனக்கு நன்மை.''

''என்ன சொல்கிறாய் நீ?''

''உன் கணவன் பெரிய ஆபத்தில் சிக்கிக் கொள்ளப் போகிறான். அவனைத் தடுத்து நிறுத்திக் காப்பாற்றிக்கொள் என்கிறேன்.''

''யார் நீ?''

''உன்னைப் போல் ஒரு பெண். ஒரு சகோதரி.''

''முட்டாள் சகோதரியே! உன் எண்ணம் என்ன? பணம் பிடுங்கப் பார்க்கிறாயா, என்னிடம்?''

''சீ, நீயும் உன் பணமும்'' — சீறினாள் அவள். ''உன்மீது இரக்கப்பட்டு ஒரு இரகசியத்தைச் சொல்ல வந்தேன் பார் என் தலையில்.''

''கோபித்துக் கொள்ளாதே. விஷயத்தைச் சொல்லு.'' — தணிந்தாள் மஞ்சு.

''மஞ்சு! கவனமாகக் கேட்டுக்கொள். உன் பெயர் எனக்கு எப்படித் தெரிந்தது, நான் யார், எங்கிருந்து பேசுகிறேன் என்றெல்லாம் அலட்டிக் கொள்ளாதே. அகஸ்மாத்தாகத் தெரிந்த ரகசியம் சொல்கிறேன். சம்பந்தப்பட்டவர்களுக்குத் தெரிந்தால் என் தலையைச் சீவிவிடுவார்கள்.''

''சரி, சொல்லு.''

''நாளை இரவு மதுரையில் ஒரு பெரிய கட்டிடம் வெடி குண்டால் தூள் தூளாகப் போகிறது.''

''ஐயோ?''

''அதனுள் 250 அறைகளில் வசிக்கிறவர்கள் அத்தனைபேரும்நசுங்கிப் புழுவாகச் சாகப் போகிறார்கள்.''

''கடவுளே!''

''அதில் ஒருஅறையில் மெட்ராசில் இருந்து வரப்போகிற இரண்டு முக்கியமான புள்ளிகள் தங்கவிருக்கின்றனர்.''

''யார் அவர்கள்?''

''ஒருவர் பெரிய பிலிம் டிஸ்ட்ரிபியூட்டர்; இன்னொருவர்...''

''இன்னொருவர்?'' — துடித்தாள் மஞ்சு.

''உன் ஹஸ்பெண்ட்.''

''ஓ— காட்!''

''அழாதே மஞ்சு'' என்றது குரல்.

''நீ சொன்னதெல்லாம் உண்மைதானா? உனக்கு எப்படித் தெரியும்?''

''நான்தான் அந்த விபத்திலே சாகப் போகிற கமலின் மனைவி.''

''அடிப் பாவி!''

''யார் பாவி? அவன்தான் பாவி. என்னைத் தினமும் சித்ரவதை செய்து கொண்டிருக்கிறவன் யார்? நிம்மி என்று ஒரு புது பிசாசு ஆட்டுகிறது அவனை. அதன் மூஞ்சியும் முகரையும் — என்னை ஒழித்துக் கட்டிவிட்டு அவளை அழைத்து வைத்துக்கொள்ள நினைக்கிறான். என்னை ஒழித்துவிடத் திட்டம் போட்டான். நான் தப்பிவிட்டேன். இப்போ மதுரைக்குஅழைக்கிறது விதி. போய்ச் செத்து ஒழியட்டும். யாருக்கு என்ன?''

''மிஸஸ் கமல்! ஏன் அழுகிறீர்கள்?''

''ஒரு வாழைக்காய் 35 காசு வீதம் நாலு வாழைக்காய் எவ்வளவு?''

''இரண்டரை ரூபாய்!''

''அதெப்படி? முட்டாள்! ரூ. 1-40 தானே!''

''நான் பதில் சொல்வதற்குள் விலை ஏறிடாதா சார்!''



''அவனுக்காக அழவில்லை மஞ்சுஅம்மா. அவனோட குற்றமற்ற உன் 'ஹப்பி'யும் சாகப் போகிறாரே என்றுதான்!''

''என்ன சொல்றே?''

''கமல் உன் கணவரைத் தனக்குப் பாது காப்பாகக் கூட்டிப் போக இருக்கிறார். அனுப்பாதே. பிடிவாதமாக நிறுத்திக் கொண்டு விடு.''

''அனுப்பவில்லை.''

''கடவுள் உனக்கு எல்லா நன்மைகளையும் செய்யட்டும்... சரி, இன்னொரு விஷயம்... நான் சரியான சமயத்துல இந்த உதவி பண்ணினதுக்கு நீயும் ஒரு உதவி பண்ண ணும்.''

''என்ன?''

''இந்த விஷயத்தை உன் கணவரிடம் சொல்லிவிடக் கூடாது. என் ஹப்பிக்கு ஊரெல்லாம் காதுகள்; கண்கள்.''

''ஓ, ஷ்யூர் நிச்சயமாகச் சொல்ல மாட்டேன். மதுரைக்குப் போவதாக என் கணவர் என்னிடம் சொல்லவே இல்லையே.''

''இனிமேல் சொல்வார். டிக்கெட் ரிசர்வ் ஆகிவிட்டது. நாளைக்காலையில்போகிறார்கள்.''

''மதுரையில் எந்த ஹோட்டலில் அது நடக்கப் போகிறது தெரியுமா?''

''ஹோட்டல் அண்டார்டிக்கில்.''

''ஓ, பசுமலையில் இருக்கிறது.''

''ஆமாம்.''

''இன்னொரு விஷயம். உன் கணவர், கமல் நாத்துடன் போவதை உன்னால் தடுக்க முடியாவிட்டால் குறைந்தபட்சம் இருவரும் ஓர் அறையில் தங்காமலாவது பார்த்துக்கொள்.''

''ஓ எஸ்.''

''தாங்க்ஸ்.'' — அந்தப்புறம் ரிசீவரை வைத்தார்கள். மஞ்சு அறைக்குத் திரும்பி வந்தாள்.

அம்மா வந்திருந்தாள். சின்னப் பயலை மடியில் போட்டுக் கொண்டு மகிழ்ந்துகொண்டிருந்தாள். 'சீ ,சிரிக்காதேடா கழுதை' என்று செல்லமாகக் கன்னத்தில் : தட்டினாள்.

''அப்படியே அப்பாவை உரித்து வைச்சிருக்கு. மூக்கைப் பாருடி.'' என்றாள் அம்மா. நிமிர்ந்து சிலையாக உட்கார்ந்திருக்கிற பெண்ணைப் பார்த்தாள்.

என்னடி யோசனை?'' என்றாள். ''மூஞ்சி திடீர்னு வாடிப் போச்சு.''

''ஒன்னுமில்லையே அம்மா'' என்றாள்.

நாலு தடவை எழுந்து போய் ஆபீசைக் கூப்பிட்டாள். மணி ஓயாமல் அடித்துக் கொண்டே இருந்தது. நாலு தடவையும் எடுக்கவே இல்லை.

எங்கே போய்விட்டார்கள் எல்லோரும்? நீலாகூடவா இல்லை?

இரவு வேகமாக நகர்ந்து கொண்டிருந்தது. மகேஷ் வருவான் என்று எதிர்பார்த்தாள். காலையில்தானே ரயில்? அதற்குள் சொல்லிக்கொண்டு போக வராமலா இருப்பார்? சொல்லிக் கொண்டு போக அவகாசம் இல்லை என்று சொல்லாமலேயே போன சந்தர்ப்பங்கள் நினைவில் வந்தன. வயிற்றைக் கலக்கியது.

தெய்வங்களைத் துணைக்கு அழைக்க ஆரம்பித்தாள். (தொடரும்)

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1981

### பிரசுரத்துக்கு ஏற்கப்பட்ட கதைகள்

1. பிரம்மோபதேசம் — விமலா ரமணி
2. இங்கு மனக்கதவுகளுக்குப் பூட்டு இல்லை — கார்த்திகைபாலன் (அறிமுகம்)
3. தபஸ் — வாதூலன்
4. கர்மா — பொன்னித்துறைவன்
5. மணமுள்ள காகிதப்பூக்கள் — எஸ். சங்கரநாராயணன்
6. மறுபடி ஜனனம் — விநோதானந்த்
7. பிழைக்கத் தெரியாதவன் — கலைமணி (அறிமுகம்)
8. வானத்தைத் தொடாத வாணங்கள் — பிரபா நடராஜன்
9. அணைகள் உடைகின்றன — ராமாபுரம் சந்துரு
10. பரிணமிக்கும் புதுயுகதர்மங்கள் — ஜானகி மணாளன்
11. கூண்டுக்குள்ளே சில சட்டங்கள் — கிருஷ்ணகுரு
12. கார்பன் காப்பிகள் — ஜெரா
13. குடிசையில் ஒரு கோபுரம் — அன்னம்
14. கங்கை நதியில் ஒருபிள்ளை — ராம்பிரசாத்
15. புதிய வாசல்கள் — முத்துதங்க ஐயப்பன்
16. அவராகப் பேசவில்லை — பாமு
17. ஒருதாயின் சாபம் — பானுமதி ராஜகோபாலன்
18. ஒரு தொட்டில் அகழியாகிறது — பாமா கோபாலன்
19. இரவு ஒருமணி, மீனம்பாக்கம் — வஸந்த்



# இதோ ஒரு கிராமம்



✕ மல்லிகை அரும்பு பறிக்கிறார் நாகம்மாள்

செங்கல்பட்டு மாவட்டத்தில் சில ஆண்டுகளுக்கு முன்னால் ஆர்ப்பாட்டமாகப் பேசப்பட்ட கிராமம் சோமங்கலம்.

இதையும் நடுவீரப்பட்டு, சிறுகளத்தூர், எருமையூர், அமரம்பேடு என்று இன்னும் ஒன்பது சுற்றுப்புறக் கிராமங்களையும் சேர்த்து இருபது அம்சத் திட்டத்தில் அக்கறை காட்டினார்கள். அது எப்படி முன்னேறியிருக்கிறது என்று பார்த்துவிட்டு வரலாம் என்று ஒரு சபலம். புறப்பட்டோம்.

குன்றத்தூர் வழியாக நந்தம்பாக்கம் வரும்போதே வங்கியின் அறிவிப்புப் பலகை கண்ணில் படுகிறது: இந்தியன் ஓவர்சீஸ் பாங்கின் பொறுப்பில் ஏற்றுக் கொண்ட கிராமம்.

இரண்டு புறமும் முந்திரிக் காடுகள். அப்புறம் இடதுபுறம் கொஞ்சம் யூகலிப்டஸ் மரங்கள்.

இன்னும் கொஞ்சம் தள்ளி இடிந்தும் இடிக்கப்பட்டும் மொட்டையாய் நிற்கும் ஒரு கட்டிடம். பதினைந்து ஆண்டுகள் முன்பு ஒரு தனியார் கல்லூரி தொடங்கி அந்த ஆண்டே மூடி விட்டார்களாம். பஸ் போக்குவரத்து இல்லை. பிள்ளைகள் வரமுடியவில்லை என்று ஒரு காரணம் சொன்னார்கள். இப்போது பஸ் வசதியும், சாலை வசதியும் சீராய் அமைந்துள்ளன.

இன்னும் சற்று முன்னேறினால் 'இதோ இருக்கிறேன்' என்று சொல்கிற மாதிரி தெரிகிற கிராமம்தான் சோமங்கலம். ஊரை ஒட்டின மாதிரி ஒரு 'நினைவுச் சின்னம்'. பாரதப் பிரதமர் அப்போது ஹெலிகாப்டரில் வந்து இறங்கிய தளமும், அப்போது அவர் பேச அமைக்கப்பட்ட மேடையும் அப்படியே விட்டு வைக்கப்பட்டிருக்கின்றன.

நடுவீரப்பட்டுக்காரர் ஒருவர் அகப்படுகிறார். பேச்சுக் கொடுக்கிறோம்.

''மானாவாரிப் பூமிங்க. தண்ணி இல்லேன்னு வெவசாயம் இல்லே. அரிசியை நாங்களே வெல கொடுத்து வாங்கறோங்க.''

''என்னங்க ஆச்சு? ஒங்க கிராமத்தை ஓகோன்னு ஆக்கிடுவோம்னு பேசிக்கிட்டாங்களே...''

அவர் தம் பெயர் கோவிந்தன் என்று சொல்கிறார். மிகவும் வெளிப்படையாக எல்லாவற்றையும் ஒளிக்காமல் மறைக்காமல் சொல்கிறார்.

திருமுடிவாக்கம், பூவிருந்தவல்லி, காஞ்சீபுரம் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் கிணறு ஆழப்படுத்த, மாடு வாங்க, உரம் வாங்க, குழாய் போட என்று இவருக்கு நிறையவே கடன் வழங்கியிருக்கிறார்கள்.

✕ ''போர்வெல்லு மேலே மூடி போட்டு அப்படியே பாழாப் போட்டுட்டாங்க...''



✕ வாயைப் பிளந்து கொண்டு பரிதாபமாகக் கிணறு





* மரத்தடிச் சிறுவர்களுக்கு மாலையில் பொழுது போக்க மனி இருக்கிறது...

''கெணறு ஆழப்படுத்த இருவதாயிரம் செலவாச்சுங்க. நாலாயிரம் கடன் தந்தாங்க. 9 கெஜம் ஆழம் கெணறு போட்டேன். ஒண்ணரை அடிகூட தண்ணி ஊறலிங்க. இருவது செண்ட் கூடப் பாயாதுங்க.''

இவருக்கு 5 ஏக்கர் புன்செய் இருக்கிறது. மழை பெய்தால் கிணறு நிரம்பி வழியுமாம். இவர் ஆழப்படுத்திய கிணறு வாயைப் பிளந்துகொண்டு பரிதாபமாகக் கிடக்கிறது. ஏறக்குறைய கிராமத்தில் எல்லாக் கிணறு களிலுமே தண்ணீர் இப்படித்தான் ஆழத்தில் கிடக்கிறதாம்.

''அம்மா திட்டம் வந்தப்போ ஏரியிலே போர்வெல் போட்டாங்க. எழுபது அடி ஆழம் குழாய் இறக்கினாங்க. தண்ணி நெறய வந்து மாறுவாரி நெலத்துக்குத் தண்ணி கெடைக்கும்னு சொன்னாங்க. ஆனா, அப்படியே அந்த வேலையை விட்டுட்டாங்க. போர்வெல்லு மேலே அப்படியே மூடி போட்டுப் பாழாப் போட்டுட்டாங்க'' என்கிறார் கோவிந்தன்.

இதுபோல் இன்னும் சில குழாய்க் கிணறுகள் 'அம்போ' என்று கிடக்கின்றன வாம். இந்த வேலையை ஏன் பாதியில் விட்டு விட்டார்கள் என்று தெரியவில்லை.

சோமங்கலம் பகுதியில் ஒரு நல்ல முன்னேற்றம் என்று குடிதண்ணீர் பிரச்னையைச் சொல்ல வேண்டும். குடி தண்ணீர் வசதியை நன்றாகவே செய்திருக்கிறார்கள்.

எல்லாக் கிராமங்களிலும் டெலிவிஷன் வந்துவிட்டது. புதுச்சேரியில் கன்னியம்மன் கோயிலில் டீ.வி. உண்டு. கோபுரத்தின் மேல் ஆண்டன்னா!

ஸ்டேட் பாங்க் வந்தது. தபால் ஆபீஸ் பெரிய அளவில் அமைந்தது. மருத்துவ மனை, கால்நடை மருத்துவமனை ஏற்பட்டது— எல்லாமே சிறப்பான நிகழ்ச்சிகள்தான்.

ஆனாலும் 'மாதிரி கிராமம்' என்று சொல் கிற அளவுக்கு இங்கே ஒன்றையும் உருவாக்க முடியவில்லை. பாங்குகள் மிகவும் தாராள மாய்க் கடன் வழங்கியிருக்கின்றன. பணத் தின் 'ஒருவழிப் பயணம்'தான்!

பணத்தைக் கடனாக வாங்கியவர்கள் ஒத் துழைக்காததால் திட்டம் தோல்வி யடைந் தது என்று ஒரு கருத்துச் சொல்லப்படுகிறது.

''வசதியே இல்லாதவர்களுக்குப் பெருந் தொகை கடனாகத் தரப்பட்டது. அவர் களுடைய திருப்பித் தரும் தகுதி ஆராயப் படவில்லை. வாங்கியவர்கள் சாப்பிட்டுவிட் டார்கள். திரும்பச் செலுத்த முடியவில்லை'' என்றும் ஒரு கருத்து.

# சோ(க)மங்கலம்

இதில், வலுவான அடி, மாட்டுக் கடன் வாங்கியவர்களுக்குத்தானும். காவல்துறையி லிருந்து ஓய்வு பெற்ற திரு ரெங்கசாமி என்பவர் சொல்கிறார்:

''அதிகாரிங்க காஙிடையானிலே போய் எருமையும் கன்னும் வாங்கித் தந்தாங்க. வர்ர வழியிலேயே கன்னு செத்துச்சு. ஆயிரத்தைந்நூறு ரூபாய் கடன்தான் மிச்சம். நானூறு ரூபாய் கட்டினேன். நாலு வருஷம் ஆனப்புறம் அந்த எருமை இப்பத்தான் சினை பிடிச்சிருக்கு.''

இதே போல் திருவத்தூரில் வாங்கிய மாட்டுக்கும், அப்போது அடித்த பெரிய காற்று மழையில் கன்று செத்துப் போயிற்றும். அதுவும் கறவை இல்லாத மாடாகிவிட்டது. மஞ்சள் காமாலை போன்ற நோய்கள் பல மாடுகளைப் பாதித்திருக்கின்றன.

மாட்டுக் கடனைப் பொறுத்தவரையில் பணமாக யாருக்கும் தரவில்லையாம். அதிகாரிகளே ஊர் ஊராய்ப் போய் மாடுகளாக வாங்கித் தந்திருக்கிறார்கள். சரியான பின் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்படாமல் இந்தத் திட்டம் தோல்வி கண்டிருப்பதாய்த் தோன்றுகிறது.

''நாங்கள் சாப்பிடுகிற தீனியை மாடுகளுக்குப் போடுகிறோம்'' என்று ஒருவர் சொல்கிறார். இது நிஜமானால் மிகவும் பரிதாபமான நிலைதான்.

மாடுகள் வாங்கியவர்கள்தான் இப்படிக் கெட்டார்களே தவிர, ஆடுகள் வாங்கக் கடன் பெற்றவர்கள் கடனையும் திரும்பக் கட்டிச் சமாளித்து விட்டார்களாம்.

''அம்மா தந்த மாடு — ஏழைங்களுக்கு... எப்ப முடியுமோ அப்பத்தான் திரும்பக் குடுப்போம்'' என்ற மனநிலை இருக்கிறது.

இந்தப் பகுதியில் படித்துவிட்டு நிறையப் பேர் சும்மா இருக்கிறார்கள். விவசாயத்தை மட்டுமே நம்புகிற பகுதியாதலால் கைத்தொழில் ஏதும் இங்கு வேரூன்றவில்லை.

''எங்களுக்கு நிரந்தரமாய் வேலை கிடைக்கும்படி இங்கே தொழிற்சாலை ஏதாவது ஏற்பட்டால் அன்றி சங்கடம்தான்'' என்பதே பலருடைய ஒருமித்த கருத்தாய் இருக்கிறது.

இங்கு மணக்க மணக்க வேரூன்றியுள்ள பயிர்த் தொழில் மல்லிகை. கூடை கூடையாய்ச் சென்னைக்கு அனுப்புகிறார்கள். பத்துப் பதினைந்து ஆந்திராக்காரர்களும் இங்கேயே உள்ளவர்களும் மல்லிகைத் தோட்டம் வைத்திருக்கிறார்கள்.

மல்லிகைச் செடியிலிருந்து அரும்புகள் கொய்வது, நீலகிரி எஸ்டேட்டை நினைவுபடுத்துகிறது. சாதாரணமாய்ச் சிறுவர்களும் பெரியவர்களும் காலையில் ஒரு மணி நேரம் ஆறு முதல் ஏழு வரை பரபரக்கிறார்கள். ஒரு சேர் அரும்பு எடுக்க முப்பது காசு கூலி.

சென்னை வியாபாரிகள் கமிஷன் அடிப்படையில் சேர் மூன்று ரூபாய் வீதம் அரும்புகளை வாங்குகிறார்களாம். அவர்களே முன் பணமும் தருவார்களாம்.

பத்துப் பன்னிரண்டு வயதுச் சிறுவர்கள் இருநூறு பேர் போல இந்த அரும்பு பறிப்பதில் மாதம் அறுபது ரூபாய்க்குக் குறையாமல் சம்பாதிக்கிறார்களாம்.

மதுரை மல்லி என்கிற இனம் வாசனை ஊரைக் கூட்டும். மாசி தொடங்கி ஆடிவரை தான் அதற்குப் பருவம். அப்புறம் கார்த்திகை வரை காட்டுமல்லிகை என்கிற வாசனை இல்லாத இனம்தான். கார்த்திகை மாதம் இது கொள்ளை கொள்ளையாய்ப் பூக்குமாம்.

நியாயமான மழை மட்டும் இருந்து விட்டால் மல்லிகை ஒன்று மட்டுமே இந்தச் சோமங்கலத்தைச் சொர்க்கபுரியாக்கிவிடும்.

மல்லிகைப் பயிர்த் தொழிலுக்கு என்று தனியாக அரசோ மற்றவர்களோ அக்கறை எடுத்ததாய்த் தெரியவில்லை. சில தனிப்பட்டவர்களின் முயற்சியாலேயே நடக்கிறது.

சோமங்கலத்தில் ஒரு திறந்தவெளித் திரையரங்கம் கட்டியிருக்கிறார்கள். இதற்கு அரசு மானியம் கூட வழங்கி யிருக்கிறது. ஒரே சீரான ஐம்பது காசு கட்டணத்தில் 375 பேர் பார்க்கலாமாம். ஆனால் புல் மண்டிய தரையில் தேளும் பாம்பும் நெளியுமாம்!

''இது ஒன்றுதான் இருபது அம்சத் திட்டத்தின் பலன்'' என்கிறார் ஒரு நண்பர். இந்தச் சினிமா அரங்கமும் இருபது அம்சத் திட்டமும் எப்படித் தொடர்புடையவை என்பது புரியவில்லை.

சோமங்கலத்தில் பெரியபாளையத்தம்மன் திருவிழா மிகவும் சிறப்பானது. ஆடி மாதம் நடக்கும் தீமிதி வைபவத்தில் நூறு பேர் வரை தீயில் இறங்குவார்களாம். இதைக் காணச் சென்னையிலிருந்தும் சுற்று வட்டாரத்திலிருந்தும் ஏராளமான பேர் கூடுவார்களாம்.

ஒருசில வீடுகள் நெசவுத் தொழிலிலும் ஈடுபடுகின்றன. கூட்டுறவு இயக்கம் இந்தக் கிராமங்களில் நன்றாகவே உணரப்பட்டிருக்கிறது. எனினும் கூட்டுறவு முறையில் பால் பண்ணையோ மற்ற தொழில்களோ உருவாகிற அளவுக்கு யாரும் அக்கறை எடுக்கவில்லை.

சுகாதார அதிகாரிகள் அடிக்கடி கிராமங்களைப் பார்வையிட வருகிறார்கள். நோய் பற்றி விசாரித்து மருந்து கொடுக்கிறார்கள்.

கிராமத்தை விட்டு வெளியே புறப்படும் போது நமக்குத் தோன்றுகிறது... ''ஆர்ப்பாட்டமாக ஒரு மாளிகையை எழுப்ப முயன்றார்கள். அஸ்திவாரமே நிறைவடையவில்லை''

—நகர்வாலா

புகைப்படங்கள்: சிக்கி

கணவன்: ''என்னால், உயர்ந்தவர்கள் எத்தனையோ பேர்!''
மனைவி: ''நீங்க பார்க்கிற லிஃப்ட் ஆபரேட்டர் வேலையில் இந்தப் பீற்றல் ஒண்ணுதான் மிச்சம்!''
- உ.ராஜாஜி



## ஜாதி ஒழிப்பு வேண்டாம்!




● தொலைக் காட்சி அறிவிப்பாளர் திருமதி லோகேஸ்வரி தாயாகி இருக்கிறார். இச்செய்தியைக் குறிப்பிடுவதற்குக் காரணம்? முன்பொரு முறை திருமதி ஷோபனா ரவி மகப்பேறுக்காக விடுமுறையில் சென்றிருந்தபோது வதந்தியைக் கிளப்பியவர்கள், திருமதி லோகேஸ்வரி மகப்பேறு விடுப்பில் சென்றுள்ள போது தங்கள் இஷ்டம்போல் வதந்தியைக் கிளப்பாமல் இருக்கவே!

● 'நாய்ச்சாப் கின்னஸ் ஸ்டவுட்' என்னும் ஒருவகை மதுபானத்துக்கு ஸ்ரீகாந்த் 'மாடலாக'க் காட்சி தருவது போல் கோலாலம்பூரிலிருந்து வெளிவரும் ஒரு பத்திரிகையில் விளம்பரம் வெளியாகியுள்ளது! சிங்கீதம் தயாரித்த ராஜாஜியின் திக்கற்ற பார்வதியில் நடித்த இவரா இப்படி போஸ் தருவது? இவர் அனுமதி இன்றியே இவர் படத்தைப் போட்டு விட்டார்களோ?



● சிவாஜி கணேசன் ரசிகர் மன்றங்களைத் தவிர 'சிவாஜி கணேசன் பறக்கும் படை' என்ற அறிவிப்புடன் ஆற்காடு சாலையில் ஓர் அமைப்புத் தென்படுகிறது!

● சம்பந்தி, தெரியும். ஆனால் சம்மந்தி என்றால் என்ன தெரியுமா? குமரி மாவட்டத்தில் துவையல் மற்றும் சட்னியை 'சம்மந்தி' என்றே அழைக்கின்றனர். அது போல், 'தோடு' என்ற சொல் குமரி மாவட்டத்தில் ஓடையைக் குறிக்கிறது.

● தெருப்பெயர்களில் ஜாதிப் பெயரைத் தார்பூசி அழித்த மாநக ராட்சியினர் அண்மையில் அசோக்நகரில் 'ராகவ ரெட்டி காலனி' எனக் கொட்டை எழுத்துக்களில் எழுதியுள்ளனரே, எப்படி என விசாரித்தபோது கிடைத்த தகவல்: மாநகராட்சியினர் 'ரெட்டி' என்ற வார்த்தையை அழித்துச் சென்ற பின்னர் காலனிவாசிகள் மீண்டும் எழுதி விட்டார்களாம்!

● ரயிலில் இளைஞர் கும்பலொன்று கடவுள் உண்டா இல்லையா? என்ற வாதத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தது. 'பிறப்பு இறப்பு அற்றவன் கடவுள்' என்று சொல்லும் போது, முருகன், கணபதி ஆகியோர் பிறந்ததைக் கூறுவதால் அவர்களை எப்படிக் கடவுளாகக் கருத முடியும்?' என்று ஓர் இளைஞர் வினா எழுப்பியபோது பெரியவர்



ஒருவர், "தம்பி... முருகன் பிறப்பு பற்றிக் கூறியிருப்பது உண்மைதான். ஆனால் இந்து மதத்துக்கே மூத்தவனான பரமசிவனுக்குப் பிறப்பு இறப்புக் கூறப்படாததை நீ அறியாதது யார் பொறுப்பு?' என்று அந்த இளைஞனை மடக்கினார். 'மேலும் இந்தக் கருத்தை நான் கூறவில்லை. மறைமலை அடிகள் தம்முடைய 'கோகிலாம்பாள் கடிதங்களில் கூறியுள்ளார்' என்றார்!

● மாம்பலம் கோதண்டராமசுவாமி தெருவில் உள்ள ஒரு குடிசையின் கூரையைத் துளைத்துக்கொண்டு டி.வி. ஏரியல் ஜம்மென்று நிற்கிறது! —யெம்ஜி



# தீப்புண் சிகிச்சை!

“லிம் ஹானிங். மலேஷியாவைச் சேர்ந்த இளைஞர். காதல் திருமணம் புரிந்து கொண்டார். இத்திருமணத்தை ஏற்றுக்கொள்ளாத 'லிம்'மின் மாமியார் இரண்டு ஆட்களை ஏற்பாடு செய்து லிம் மோட்டார் சைக்கிளில் சென்றுகொண்டிருந்தபோது திராவகத்தை வீசச் செய்தார். முகம், உடல் எங்கும் திராவகம் பட்டு, வெந்து, காயங்கள். இரண்டரை மாத சிகிச்சை மலேஷியாவிலேயே. ''நான் லயன்ஸ் கிளப் விஷயமாக மலேஷியா சென்றபோது இவரைச் சந்தித்தேன். சென்னைக்கு அழைத்து வந்து கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி மருத்துவ மனையில் அட்மிட் செய்து சிகிச்சை செய்கிறேன். இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் பூரண குணமடைந்து மலேஷியா திரும்பவிருக்கிறார்'' என்று கடந்த பத்து மாதங்களாக சிகிச்சை பெற்று வரும் மலேஷிய இளைஞரை அறிமுகப்படுத்தி வைக்கிறார் கீழ்ப்பாக்கம் மருத்துவமனை ப்ளாஸ்டிக் சர்ஜரி பிரிவின் தலைவர் டாக்டர் திருமதி மாதங்கி ராமகிருஷ்ணன்.

தூங்கிக் கொண்டிருந்தபோது பக்கத்திலிருந்த விளக்கில் முந்தானை பட்டுத் தீப்பிடித்துக் கடந்த ஓராண்டுக்கு மேல் சிகிச்சை பெற்று வரும் செல்வி—

ஸ்டவ் வெடித்து விபத்துக்கு உள்ளான ராணி.

எதிர் எதிர் வீட்டுப் பெண்கள் இருவருக்கிடையே ஏற்பட்ட சண்டையில் ஒருத்தி எரியும் சிம்னி விளக்கைத் தூக்கி வீச, அது தூளியில் படவே நெருப்புக் காயங்களுக்குட்பட்ட ஒரு வயதுக் குழந்தை—

இப்படித் தீக்காயங்களுடன் பலர்.

டாக்டர் மாதங்கி ராமகிருஷ்ணன் கூறினார்:

''உண்மையில் பிளாஸ்டிக்குக்கும், பிளாஸ்டிக் சர்ஜரிக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை. இந்தச் சிகிச்சை முறையைக் கண்டுபிடித்த ஜெர்மானிய டாக்டர் 'ஸீஸ்' (Zeizz) புதிய பகுதி. உருவாதல் என்னும் பொருள்பட 'ப்ளாஸ்டிக் சர்ஜரி' என்று பெயரிட்டார்.''



தற்போது தீப்புண்ணால் பாதிக்கப்பட்ட உடற் பகுதிகளைச் சீர்செய்ய உடலின் வேறு பகுதியிலிருந்தும், ஒருசில சந்தர்ப்பங்களில் உடன் பிறந்தோர் உடலிலிருந்தும் தோலினை எடுத்துப் பயன்படுத்துகின்றனர். அமெரிக்காவில் வெள்ளைப் பன்றியின் தோலை உபயோகப் படுத்துகின்றனர். டாக்டர் மாதங்கி, 'குழந்தை பிறப்புக்குப் பின், அதன் நஞ்சினை ஒரு பயலாஜிகல் டிரஸ்ஸிங்காகப் பயன்படுத்தலாம்' என்று ஆராய்ச்சி செய்து கூற இதற்கென அவருக்கு ''மானெக்ஷா அவார்ட்'' வழங்கப்பட்டுள்ளது.



டாக்டர் மேஜை மீது இருந்த ஒரு வாசகம்: ''தீப்புண்கள் மீது தண்ணீரை ஊற்று!''

''தீக்காயங்கள் மீது தண்ணீர் படக் கூடாது என்று ஒரு அபிப்பிராயம் நிலவுகிறதே?'' என்று கேட்டபோது. அவர் பதில்: ''அது தப்பான அபிப்பிராயம். தண்ணீர் தாராளமாகப் படலாம். விளைவு நல்லதாகவே இருக்கும்!''

பேட்டி: எஸ். சந்திரமௌலி

# வட்டமேஜை

● இந்த வாரக் கார்ட்டூனில் பிரம்மானந்த ரெட்டி, ஸ்வரன், கமலாபதி, சுகாதியா ஆகியோருடன் பா. ராமச்சந்திரனைச் சேர்க்க மறந்தது ஏனோ?

சென்னை-23 கே. வி. எஸ். மணி

● பொருளாதாரப் பொட்டலம் என்ற தங்கள் தலையங்கம் இன்றைய இந்திய பொருளாதார நிலையினை நன்றாக எடுத்துக் கூறியுள்ளது.

வங்கிகளின் மீது கட்டுப்பாடு, பெட்ரோலின் வரி உயர்வு (விலை உயர்வு) ஆகியன பொருளாதார நிலையை அபிவிருத்தி செய்வதற்கான கண்டுபிடிப்புக்கள் என்று சொல்லப்பட்டாலும் அவை ஏற்படுத்தும் 'எதிர் விளைவுகள்' என்ன என்பதை அறிய மறுத்து விட்ட நிலையில் நாம் என்ன செய்ய முடியும்? ரிசர்வ் வங்கியின் அறிக்கைப்படியே, இந்தியாவில் உள்ள வங்கிகள் அனைத்தும் 20 சதவிகிதப் பணப் புழக்கத்தைத்தான் கட்டுப்படுத்துகின்றன என்பதை அறிகையில் மீதமுள்ள 80 சதவீத புழக்கத்துக்கு எந்த அலசரச்சட்டமும் இல்லாத நிலையில், பொருளாதாரம் அபிவிருத்தி அடைவதாவது?

பொருளாதாரம் Demand and Supply என்பதைப் பொறுத்து அமையும் என்ற அடிப்படையான அறிவினைக்கூட மறந்து நடக்கையில் என்ன செய்ய?

வேலூர் வே. ராஜேந்திரன்

● ''மீனாட்சிபுரத்துக்குப் பிறகு'' என்ற கட்டுரை மூலம் ஒப்பாரியில் கலக்காமல் நிமிர்ந்து நின்று இன்னொரு பக்கத்தைச் சுட்டிக் காட்டியதற்கு மகிழ்கிறேன். இது பேராசிரியர் கல்கி வளர்த்த மரபுக்கு ஒத்த வகையிலிருக்கிறது.

சென்னை-35 எஸ்.வி.எஸ்.

● பத்மஸ்ரீ டி. வி. ராமானுஜம் அவர்களின் ''ஒரு நல்ல கச்சேரி'' கட்டுரையைப் படித்தேன். அது ஒரு நல்ல கச்சேரியை அனுபவித்த மன நிறைவைத் தந்தது! ஆனால் லய சம்பந்தமாக அவர் குறிப்பிட்டதில் ஒரு சிறு கருத்து மாறுபாடு. லய வாத்தியங்களை அதிகமாகச் சேர்த்துக் கொள்வது நல்ல இசைக்கு இடையூறு என்பதை என் மனம் ஏற்க மறுக்கிறது. முன் காலங்களில் வயலின் மிருதங்கம், கஞ்சிரா கடம் முதலிய பக்க வாத்தியங்களோடு நடந்த கச்சேரிகளில் இருந்த சௌக்கிய பாவம் இந்நாளில் மிகக் குறைவான (வயலின், மிருதங்கம் மாத்திரமே) பக்க வாத்தியங்களுடன் நடைபெறும் பல கச்சேரிகளில் கிடைப்பதில்லை. எனவே கையாள்கிற முறையில்தான் தவறே ஒழிய வேறில்லை.

உப பக்கவாத்தியங்கள் சம்பந்தமாகத் திரு ராமானுஜம் அவர்கள் குறிப்பிட்டுள்ளது போன்றதொரு அபிப்பிராயம் பரவத் தொடங்கி விட்டால் ''கஞ்சிரா'' போன்ற சிறந்த லய வாத்தியங்கள் பிற்காலத்தில் வழக்கொழிந்தே போய்விடக் கூடியதொரு அபாயமும் இருக்கிறது.

மதுரை கே. வி. ஆர். எஸ். மணி

● எஸ். சங்கர நாராயணன் அவர்களின் ''ஒரு சிறகு இரு பறவைகள்'' கதை பற்றி ஓவியர் திரு மணியன் செல்வன் அவர்கள் கூறிய கருத்து மிகவும் நன்றாக... நன்றாக... இருந்தது.... இருந்தது.

மதுரை-20 பி. ராஜசேகரன்

● ஒரே ''டேக்கில்'' ஓ.கே. ஆகவேண்டிய கமலை நான்கு டேக்குகளில் ''பத்மஜா'' பிய்த்து வாங்கி விட்டாரே! நல்ல கற்பனை!

பெங்களூர்-21 பாரதி

● இவ்வாரக் கல்கியில் நளினி சாஸ்திரியின் விமர்சனங்கள் ஏமாற்றம். இந்தியிலிருந்து வந்த இரவல் மசாலாவை (சவால்) பாராட்டிவிட்டுத் தமிழிலே ஒரு தரமான முயற்சி செய்ய நினைத்த 'அரும்பு'களைச் சாடியுள்ளாரே!

சென்னை-24 வி. ரவிச்சந்திரன்

● ''அரும்புகள்'' விமர்சனத்தில் ''சொல்லத்தான் முயன்றிருக்கிறார்கள் ஆனால் கொல்லத்தான் முடிந்தது'' என்ற வரி பிரமாதம்.

குரோம்பேட்டை வி. தியாகு

● பன்னீர் புஷ்பங்கள் படத்தின் சிறப்பு அம்சமான எம். வி. சேகரின் கேமராவை 'காலை வாருகிறது' என்றும் சவால் படத்தில் பிரசாத்தின் கேமரா குறைமையாக இருக்கிறது என்றும் தலைகீழாக எழுதுகின்ற உமது விமர்சகருக்கு மூன்று முறை 'சவால்' படம் பார்க்கும் தண்டனை தரலாம்.

நெல்லிக்குப்பம் இரா. சீனுவாசன்

● 12–7–81 கல்கி இதழில் 'கண்ணீரில் எழுதாதே' பட விமர்சனத்தில் அதன் ஒளிப்பதிவாளரான என்னுடைய பெயர் ரவீந்திர ராய் என்பதற்குப் பதிலாக ரகுநாத ராய் என்று தவறாகக் குறிப்பிட்டுள்ளதைக் கண்டு வருத்தப்பட்டாலும், அதில் குறிப்பிட்டுள்ளபடி பாராட்டுக்கள் என்னைச் சார்ந்தது என அறிந்து பெருமைப்படுகிறேன்.

சென்னை-90 ரவீந்திர ராய்

● படத்துல அயகா மியூஜிக் போட்டுக்கிற விஸ்வநாத அண்ணாச்சியைப் பத்தி ரெண்டு வரி சொல்லாமே உட்டுக்கினியே கண்ணு! இது நாயமா?

பெருங்களத்தூர் எல். ரவிசங்கர்

# சுவர்ணமுகி

## ஸ்ரீவேணுகோபாலன்

ஜிங்கி (தமிழ்நாட்டில்) வசதியான பெண்கள் சித்திரப் புடவை உடுத்தி, கையில் தங்க வளையல் மோதிரங்கள் அணிகிறார்கள். அழகான தோற்ற முள்ள இவர்கள் வெளியில் நேர்த்தியாகவும், வீட்டில் மோசமாகவும் காட்சி தருகிறார்கள்.

ஜான் நியோஃப் (1664)

**19**

சித்ரகலாவின் விழிச் சித்திரங்கள் தோதாவின் மீது விழுந்தன. அவன் மன இறக்கைகள் சடசடத்தன. எங்கேயேனும் பறக்கலாம் போல இருந்தது. அவள் கண்ணுக்குள்ளேயே பறக்கலாம். ஆகாயமாகத் தெரிந்தன அவை. அவ்வளவு அகலம், தூரம், விஸ்தாரம்.

''தண்ணீரா? இதோ வரேன்!'' என்று சொல்லி ஆளை விளித்து நீர் கொண்டுவரச் செய்தான்.

சித்ரகலா நீரைப் பருகினாள். பருகும் போது கடைக்கண்ணை மெல்ல அவன் மீது அவரோகணித்தாள். அம்பு பட்டவன்போல் துடித்தான் அவன்.

ரத்னவளி, உடனே, ''நீ ரொம்பக் களைச் கட்டே, கொஞ்சம் சயனம் செய்யம்மா!'' என்று சொல்லி அடுத்த அறைக்குள்ளே சித்ர கலாவைக் கொண்டு விட்டு வந்தாள்.

பிறகு தோதாவைத் தன் அபிநயக் கண்களால் பார்த்து, ''சொல்லு தோதா! சுவர்ணமுகி எங்கே?'' என்றாள்.

''ரத்னம்மா! நீகூடவா என்னைச் சோதிக்கிறாய்? உனக்கு விஷயம் தெரியாதா? உண்மையில் அவளை நான் இழந்து விட்டேன்'' என்றான் தோதா.

'அடேயப்பா' என்ற அர்த்தத்துடன் ஒரு பார்வை வீசினாள் ரத்னவளி! இரு கைகளையும் இடுப்பில் வைத்துக்கீழ் உதட்டை வாய்க்குள் மடித்தாள். ''ராயசம் கிருஷ்ண நாய்க்கன் வம்சமாச்சே நீ! லேசுலே சொல்றவனா? கல்லுளி மங்கான்!'' என்று வாயால் வலித்தாள்.

தோதா சங்கடமாக விழித்தான்.

''இல்லே ரத்னம்மா! நம்பு! சுவர்ணமுகி என்னோடு இல்லே. அவளை ஒளிச்சு வைக்கவும் இல்லே'' என்றான் அழாக் குறையாக.

''இருக்கட்டும் இருக்கட்டும்! யார் யார் எப்படி இருப்பான்னு எனக்குத் தெரியும்! இந்தக் குலத்திலே பிறந்து இதுகூடத் தெரியலேன்னு நான் தொழிலுக்கு என்ன லாயக்கு? சரி! சித்ரகலாவைப் பார்த்தியா?'' என்றாள் ஒரு காலை மடித்துக் கொண்டு.

''இப்போ வந்திருந்தாளே! அவள்தானே?'' என்றான் தோதா.

''ஆமாம்! என் கடைக்குட்டி! இன்னும் கன்னி கழியலே'' என்றாள்,



ரத்னாவளி. அவள் வலது கன்னத்தில் ஒரு குழி விழுந்தது.

தோதா உம்மென்று பலவீனமாகச் சொன்னான்.

''நரசய்யாவிடம் இவளைக் காட்டவில்லை. நரசய்யா என்ன? யாரிடமும் இதுவரை காட்டவில்லை. எனக்கு இஷ்டமில்லை. என் கடைக்குட்டி ரொம்பக் கெட்டிக்காரி. நக அழகு ஒண்ணையே இன்னிக்கெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கலாம். அவளைப் போய்ப் பத்தோடு பதினொண்ணு அத்தோடு இது ஒண்ணுன்னு ராணிவாசத்திலே (அந்தப்புரம்) சேர்க்கிறதிலே எனக்கு இஷ்டமில்லை. நரசய்யா பார்த்தான்னா இன்னிக்கே இவளைத் தூக்கிட்டுப் போய்த் தனி மாளிகையே கட்டி வச்சுடுவாரு! ஊஹூம் வேண்டாம்...''

இவள் என்னத்துக்குப் பீடிகை போடுகிறாளோ தெரியலையே என்று அலமந்தான் தோதா.

''இந்தப் பெண்ணை இங்கே கொண்டுவந்திருக்கிறதிலே விசேஷம் இருக்கு. அவள் பிறந்தபோதே கையிலே சக்கரம் இருக்கு. தரணியை ஆளுவான்னு காளஹஸ்தி ஜோஸ்யர் சொன்னாரு. அதுக்கு வேளை இப்போ வந்திருக்கு.''

பீடிகை பலமாக இருந்தது.

''எப்படிச் சொல்றே, ரத்னம்மா?'' என்றான் தோதா.

''ஏன், நாகலாதேவிக்கு வரல்லையா?'' என்று கேட்டு முகவாயைக்கைக் கிண்ணத்தில் வைத்தாள் அவள். தளுக்கு மட்டும் மூக்கில் ஆடியது.

'நாகலா தேவி' என்று மனத்துள் முணுமுணுத்தான் தோதா. அந்தத் தேவதாசிப் பெண் அரண்மனையிலிருந்து கொண்டு இளவரசன் கிருஷ்ணதேவனைத் தன் காதல் வலைக்குள் சிக்கவைத்தாள். கிருஷ்ணதேவன் அவள் மீது ஒரே மோகமானான். நாகலா அவனிடமிருந்து ஒரு சத்தியம் வாங்கிக் கொண்டாள். அவன் ராசாவாக மாறினால் அவளை அவன் பட்டமகிஷி ஆக்கிக் கொள்ள வேண்டும்.

அவள் எதிர்பார்த்தது போல, அவனும் ராசாவாகி, கிருஷ்ணதேவராயராக மாற, அந்தத் தாசிப் பெண்ணுக்குக் கொடுத்த சத்தியத்தை மறக்காமல் அவளைத் தன் பட்டமகிஷியாக ஏற்றுக் கொண்டார் அவர்.

ராயரின் இந்த அற்புதக் காதலை எத்தனையோ பேர் தெலுங்கிலும் சமஸ்கிருதத்திலும் காவியமாகப் பாடிவிட்டார்கள்.

இப்போது சித்ரகலாவை யாருடைய காதலுக்கு இலக்காக்கப் போகிறாள் இந்த ரத்னாவளி?

கேள்வியை அவளிடம் கேட்டதும் ரத்னாவளி தனது பெரிய வாயில் பெரிய முறுவல் தொடுக்கி,

''ஏன்? நீதான் என் பெண்ணை ஏற்றுக் கொள்! நீயேராசாவாகமாட்டாயா என்ன?'' என்றாள் அழுத்தமாக.

''நானா?'' என்றான் தோதா.

''ஆமாம்! இப்போ நாட்டில் யார் யார் தான் ராஜா ஆவார்கள் என்று சொல்வதற்கில்லையே! வாள் பிடித்தவர் எல்லாம் ராஜாவாகிவிடுகிறார்களே! பிரசித்தி பெற்ற விஜய நகர வம்சாவளி உடைந்து சிதறி விட்டதே! தலைக்குத் தலை சிங்காதனத்துக்குப் போட்டி போட, நாட்டில் ஒரு பலவானையோ புத்திசாலியையோ காணவில்லையே! இப்படி இருக்கும் சூழ்நிலையில், தோதா....'' என்று நிறுத்தினாள் ரத்னாவளி.

தோதா ஒரு கொக்கியான பார்வையை அவள்மீது தூக்கிப் போட்டான்.

''நீ ஏன் ராஜாவாக ஆகக் கூடாது? உன்னிடம் எந்தத் தகுதிதான் இல்லை? குணம், குலம் இருக்கிறது, பலம் இருக்கிறது. எல்லாவற்றையும்விட ராஜ்யலக்ஷ்மியே உன்னைத் தேடி வந்திருக்கிறாளே!'' என்றாள் ரத்னாவளி.

''ராஜ்யலக்ஷ்மியா? எங்கே?'' என்றான் தோதா.

''பார், பார், பார்! என்னிடமே இந்தத் தேர் வடம் விடுகிறாயே! வேண்டாம்! சுவர்ணமுகி என்ற பெண்ணுக்கு மதிப்பு இல்லை. ஆனால் அவளிடம் இருக்கும் ரகசியம் இருக்கே, அது எவ்வளவு பெரிய மதிப்பு உடையது?'' என்றாள் அவள்.

''எதைச் சொல்றே, ரத்னம்மா?''

''விஜயநகரப் பொக்கிஷம்! அது மட்டும் கிடைத்தால் ஒரு சாம்ராஜ்யத்தையேவிலைக்கு வாங்கிவிடலாமே! அந்தப் பொக்கிஷ ரகசியம் சுவர்ணமுகியிடம் தானே இருக்கு!'' என்று கூறி ரத்னாவளி ஒரு 'அடிச்சான் தப்பல்' அபிநயித்தாள்.



''ஓகோ! பொக்கிஷத்தைத்தான் ராஜ்ய லக்ஷ்மின்னு சொன்னியா?'' என்றான் தோதா.

''ஆமாம்! இதை அடையத்தான் பல பேர் காத்திருக்காங்க. உன் கையிலே இது தானா வந்து கிடைச்சிருக்கு. நான் சொல்றதைக் கேளு. என் மகளை ஏத்துக்க. உனக்கு என் ஐயாயிரப் படையைத் தரேன். பொக்கிஷத்தை எடுத்துக்க. ராஜ்யத்தைப் பிடி. எவன் எவனோ ராஜா ஆகிறான். நீயே ஆயிடு. பிரமாதமா ஆளலாம். எங்கே எனக்கு உறுதி கொடு!'' என்று சொல்லிக் கையை நீட்டினான் அவன்.

தோதா தயங்க, அவளாகவே அவனுடைய கையை எடுத்து அழுத்தினாள்.

காலையில் அருவிக் கரையிலிருந்து சுவர்ண முகி குளித்துவிட்டு வரும்போது கிக்கியு அவளோடு வந்தாள். ஏனாதி குலத்து இருபத்தைந்து வயதுப் பெண் அவள்.

கட்டுமான உடல் பிடிப்புடன் துறுதுறு என்ற விழிகளில் ஒரு கன்றுத் துள்ளலோடு இருந்தாள். எப்போதும் பூத்திருக்கும் சிரிப்பு.

இங்கு வந்த சில நாட்களில் அவளது சிநேகிதம் சுவர்ணமுகிக்கு மிகவும் பிடித்திருந்தது.

தனியாகக் குடிசை போட்டுச் சுவர்ண முகிக்கு எல்லா சௌகரியங்களையும் செய்து கொடுக்க ஏனாதி குலத்தார் கிக்கியுவை அனுப்பியிருந்தார்கள்.

குடிலுக்கு வந்ததும் சுவர்ணமுகி கையில் ஒரு ஓலையையும் தங்கக் கம்மலையும் வெளியே கொணர்ந்தாள்.

''கிக்கியு! ஜாக்கிரதையாகப் போவாயா?'' என்றாள் சுவர்ணமுகி.

''என்னோடு இரண்டு பேர் வராங்க. நீங்க கவலைப்படாதீங்க!'' என்றாள் கிக்கியு.

''முதல்லே நாராயணவனம் போய்ப் பாரு. யாதவ ரங்கநாதராயர் வீடு எது என்று கேளு. சொல்லுவாங்க! அங்கே போய் ராயரைப் பாரு. அவர் மட்டும் தனியாக இருக்கும் போது இந்த ஓலையைக் கொடு. வேறு யாரிடமும் கொடுக்காதே!'' என்றாள் சுவர்ணமுகி.

பிறகு அவள் கையில் கம்மலையும் கொடுத்து, ''உனக்குக் கஷ்டம் ஏற்பட்டால் இதை விற்றுக்கொள்!'' என்று கூறினாள்.

கிக்கியு அவளிடம் விடைபெற்றுப் போக, பாறைகளில் அவள் தாவிக் குதித்துக் கீழே இறங்கிப் போவதை சுவர்ணமுகி பெருமூச்சோடு பார்த்துக் கொண்டே இருந்தாள்.

அவள் போன பிறகு கொந்தி என்று அழைக்கப்படும் ஒருநடு வயதுக் காரி, அள்ளி முடிந்த கூந்தலுடன் கையில் கிச்சிலிப்பழங்களையும், பனங்கிழங்கையும் தூக்கிக்கொண்டு வந்தாள்.

''இந்தாம்மா! எடுத்துக்க! இன்னும் எத்தினி நாள் சொந்த மனுஷாளை விட்டு இருப்பியோ! ராணி மாதிரி இருக்கே. இப்படிக் காட்டுக்குள்ளே வந்துட்டியே!'' என்று வழக்கம்போல் அப்போதும் அங்கலாய்த்து உட்கார்ந்தாள்.

''நாட்டிலே பஞ்சம் கொந்தி! உறவுக்காரங்க போன இடம் தெரியலே. ஊரு கரைங்களை விட்டு அவங்க அவங்க ஓடிட்டாங்க'' என்றாள் சுவர்ணமுகி.

''ஒருத்தர்கூட உனக்கு ஏதலையா அகப்படலையா? இப்படி காட்டு ஜனங்க கிட்டே இருக்கியே அம்மா!'' என்று மேலும் அவள் சுவர்ணமுகியின் துயரத்தைப் புதுப்பித்துக் காட்டினாள்.

அவள் அப்படிச் சொல்லும்போது அந்த இடத்தில் அழுதுவிடலாம் போல இருந்தது சுவர்ணமுகிக்கு.

பல்லை இறுகக் கடித்து, வார்த்தையை ஒன்றும் வெளிவிடாமல் இருந்தாள்.

''போகட்டும் கொஞ்சநாள் பொறுத்துக்க. வர்ற பௌர்ணமிக்கு ராசா வேட்டையாட வருவாரு! அவரோடு கூட சனங்களா வருவாங்க! அவங்ககிட்டே கேட்டியானா உன் சொந்த மனுஷங்க அகப்படுவாங்க!'' என்றாள் கொந்தி.

---

# இங்கிலாந்து செல்லும் இவர்கள்....



✖ சிவராம கிருஷ்ணன்

இந்தியாவிலிருந்து பத்தொன்பது வயதுக் குட்பட்டவர்கள் கிரிக்கெட் குழு ஒன்று சென்ற மாத இறுதியில் இங்கிலாந்துக்குப் போயிருக்கிறது. ரவி சாஸ்திரியைக் காப்டனாக் கொண்ட இந்தக் குழுவில் தமிழ் நாட்டைச் சேர்ந்த இரண்டு பேர் இடம் பெற்றுள்ளனர்: அருண், சிவராமகிருஷ்ணன்.

இரண்டு பேருமே ஆல் ரவுண்டர்கள்.

விளையாட்டு வீரர்களுக்கான தேசிய ஸ்காலர்ஷிப்பாக ஆண்டுக்குத் தொள்ளாயிரம் ரூபாய் பெற்று வரும் அருணுக்கு ரிச்சர்ட்ஸ், கவாஸ்கர், சந்தீப் பட்டேல் ஆகியோரது ஸ்ட்ரோக்குகள் ரொம்பப் பிடிக்குமாம்.

சிவராமகிருஷ்ணனுக்கு 'பேபி ஆஃப் தி டீம்' சிறப்புமுண்டு. இவர் விஸ்வநாத்தின் பாட்டிங்கையும் சந்திர சேகரின் பௌலிங்கையும் வெகுவாய் ரசிப்பதாய்க் கூறுகிறார்.

- எஸ். சந்திரமௌலி

✖ அருண்



''எந்த ராசா வருவாரு?'' என்று முறுவலோடு கேட்டாள் சுவர்ணமுகி.

''நரச ராசா!'' என்று வாய் முழுக்குமாக உச்சரித்தாள் கொந்தி.

''என்ன ராசா?''

''நரச ராசா!'' என்றாள் அழுத்தந் திருத்தமாக.

சுவர்ணமுகியின் கண்கள் விரிந்தன. பார்வை கொந்தியை விட்டு எங்கோ காட்டுக்குள் ஓடியது. ''எப்போ வருவார்னு சொன்னே?''

''பௌர்ணமிக்கு.''

அப்புறம் கொந்தி பேசியதெல்லாம் சுவர்ணமுகியின் காதில் விழவில்லை.

வெறும் 'உம்'களாகக் கொட்டி, கடைசியில் அவளை ஒருவாறு வழியனுப்பிவிட்டு, குடிலுக்குள் உட்கார்ந்தாள்.

கைகள் தாமாகத் தலையைப் பற்றிக்கொண்டன.

நரசய்யா தளவாய் வந்தால் இந்த மலை ஜனங்கள் சுவர்ணமுகியைப் பற்றி நிச்சயம் சொல்லிவிடுவார்கள்.

அல்லது அவர்களைக் கட்டுப்பாடு பண்ணினாலும் நரசய்யாவின் ஆட்கள் ஒருவேளை இந்தக் குடியிருப்புக்குள் வந்து அவளைக் கண்டுபிடித்தாலும் பிடிப்பார்கள்.

ஒரு பாதுகாப்புக் கிடைக்கிற வரை இங்கே தங்கலாம் என்று சுவர்ணமுகி நினைத்திருந்தாள். அது நடவாது போல இருக்கிறதே!

துக்கம் இருட்டைப் போல அவளைச் சூழ, பகல் முழுதும் எதுவும் ஓடவில்லை. சாப்பிடவும் இல்லை.

என்னென்னவோ பயங்கள் வந்து ஓடின.

இந்த நாடு சீராகி எப்போது அமைதி அடையப் போகிறது?

ஒரு தலைமுறையாக ஜனங்களும் ராஜ குடும்பங்களும் அல்லாடுகின்றனவே, என்று நினைத்தாள் அவள்.

மெள்ள இரவு படர,

தாரகைகள் சின்ன முருக்கம் பூக்கள் போல் வானம் எங்கும் அலர்ந்தன.

மெலிதான ஒரு கனவு வெளிச்சம், அந்தப் பிராந்தியம் முழுவதும் பரவியது.

பெரிய அரண்யத்தின் அருகில் இருந்ததால் அந்தப் பிரதேசத்தை ஒரு அமிதமான நிசப்தம் சிக்கென்று மூடியது.

காட்டுக்கு உரிய பசுமை கலந்த வாடை உள்ளே குடிலுக்குள் வந்து மெள்ள அவளைத் தட்டியது.

மனம் ஒரு கனமான அமைதியோடு கீழே படிய,

தூரத்தில் ஒரு பெண் பாடும் காதல் பாட்டு மெள்ள ஒரு புகை போல் அந்தப் பிரதேசம் முழுதும் நிறைந்தது.

காதல் பாட்டு எனினும் அவள் பாடும் தொனியில் அது சோகம் கலந்து தெரிந்தது.

இங்கே வந்த சில தினங்களுக்குள் கிக்கியுவிடமிருந்து அவள் ஏராளமான விஷயங்கள் கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறாள்.

இங்கே அண்ணியைப் பார்த்து மைத்துனன் பாடும் காதல் பாட்டும், மைத்துனனைப் பார்த்துக் கொழுந்தி பாடும் காதல் பாட்டும் தான் அதிகமாகப் பாடப்பட்டன.

பாடும்பொழுது அவர்கள் தொனியில் இழையும் கிளுகிளுப்பு கேட்பவர் மனத்தை ஏதோ செய்துவிடும்.

இன்று இந்த இரவு வேளையில் சுவர்ணமுகியின் மனத்தை அது அப்படித்தான் செய்தது.

எங்கேயோ புகுந்து இனமில்லாத சுருதியை மீட்டுவது போன்று இருந்தது.

தனக்கு நேர்ந்ததை யெல்லாம் நினைத்துப் பார்த்தாள் சுவர்ணமுகி. சோதனைகள் ஒன்று மாறி ஒன்றாக வந்த வண்ணம் இருக்கின்றன. இன்னும் நின்றபாடில்லை.

மெள்ள அரை நிலாவின் வெளிச்சம் ஒரு வெள்ளித் துணி போல் உள்ளே படிய,

அவள் கண்கள் இரண்டும் நீர் நிறைந்த இரு வாவிகளாக—மாறிவிட்டன.

வெகுநேரம் கண்களைத் துடைத்தவண்ணம் இருந்தாள். பிறகு, மெள்ளக் கண் அயரும் போது,

அந்த ஓசை.

குதிரை தன் கால்களைத் தூக்கி வைத்து வரும் குளம்பு ஓசை, அவள் மனசில் மட்டும் கேட்டது. மனக் கண் முன் அந்தக் காட்சி உற்பத்தி ஆகியது.

உடம்பு முழுதும் ரத்தம் பூசிய அந்த இளைஞன் என்ன கம்பீரமாக வந்தான்!

தன் வலியையும் உபாதையையும் பொருட்படுத்தாது எவ்வளவு அழகாகப் பேசினான் அவன்!

பாபம்! அவனுக்கு நிறைய உதவி செய்திருக்க வேண்டாமோ?

அவன் காட்டிய எதிர்ப்பையும் சட்டை செய்யாது அவனைத் தூக்கி பல்லக்கில் போட்டு ஒரு மருத்துவரிடம் காட்டியிருக்கக் கூடாது? இப்படி இங்கிதம் தெரியாத பெண்ணாக இருந்தேனே!

அப்படிச் செய்யாமல் அவனை வெய்யிலுக்கு இலக்காக்கி அந்தக் கட்டாந்தரையில் போட்டுவிட்டு வந்தோமே!

எவ்வளவு பெரிய தப்பு அது!

கனவுக்குள் இன்னும் குளம்பொலிகள் கேட்டுக் கொண்டே இருந்தன.

டக்கு டக்... டக்கு டக்...

அந்தச் சப்தங்கள் பெரிதாகி வர, அவை கனவுக்குள் மட்டும் கேட்கவில்லை, நிஜமாகவே குடிலுக்கு வெளியே கேட்கிறது என்று தெரிந்ததும் கண்களைத் திடுக்கிட்டு விழித்தாள் அவள்.

(தொடரும்)



# மனவாசம்
## கண்ணதாசன்

### 35. திறந்துவிட்ட கதவுகள்

தமிழகர்களிடத்திலே அளவற்ற அன்பு* கொண்ட லீ - குவான் - ஈயைச் சந்திக்க வேண்டும் 'என்கிற எண்ணம் அவனுக்கு இருந்தது. ஆனால், செய்த முயற்சிகள் வீணாயின. பல அரசியல்காரணங்களினால் சுறுசுறுப்பாக இருந்தார். அதனால் சந்திக்க இயலவில்லை.

சிங்கப்பூர் நகரத்தில் முதன் முதலாக 'மாரா' மண்டபத்தில் பேச வேண்டும் என்று அவன் அழைக்கப்பட்டான். ஆனால் சிங்கப்பூர் தண்டபாணி கோயிலில் பேசிய பிறகுதான் மற்ற இடங்களில் பேசுவேன் என்றுஅவன் கூறிவிட்டான்.

அன்றைக்கு தண்டபாணி கோவிலில் பிரம் மாண்டமான கூட்டம் இருந்தது. சிங்கப்பூரில் வாழ்கின்ற பலவகையான மக்களும் கூடி இருந்தார்கள். அந்த சிங்கப்பூர் கோவில் அவ்வளவு பெரிய கூட்டத்தை அதற்குமுன்னாலே ஓரிரு முறை கண்டிருக்கிறது என்றாலும், அவன் போன அன்று வந்திருந்த கூட்டம் மிகப் பெரியது என்று கூறினார்கள். அவனுக்கு நல்ல பரிசுகள் எல்லாம் அங்கே நண்பர்கள் தந்தார்கள்.

சுமார் ஒரு மணி நேரம் அவன் பேசினான். ஏதோ இனந் தெரியாத ஒரு உற்சாக உணர்வு உள்ளுக்குள்ளேயே சிங்கப்பூரைப் பற்றி அவனுக்கு இருந்தது.

அன்றிரவு, சிங்கப்பூர் ஒட்டலிலே வந்து, நண்பர்களோடு அளவளாவும் போது, தன்னுடைய மனநிறைவுக்கும் உற்சாகத்திற்குமானகாரணத்தை அவன் குறிப்பிட்டான்.

எந்த ஊர்தான் அவனுக்கு உற்சாகமாகஇல்லை?

அன்றைக்கு இருந்த ஆரோக்கியத்தில் எந்த ஊருக்குச் சென்றாலும், உற்சாகமாகவே நடந்து கொண்டான், வாழ்ந்தான்.

சுமார் ஏழு நாட்கள் சிங்கப்பூர் வாசம்.

தண்டபாணி கோயில், 'மாரா' மண்டபம், மீண்டும் தண்டபாணி கோயில், நகரத்தார் சங்கக் கூட்டம் என்றெல்லாம் கூட்டங்களிலே பேசி, அவன், மற்றவர்களையும் திருப்தி செய்து, தானும் திருப்தி யடைந்தான்.

யாழ்ப்பாணத் தமிழர்களிடத்தும், மாரியம்மன் கோயிலிலேயும் அவன் பேச வேண்டும் என்று விரும்பினார்கள். அதையும் விட்டு வைக்கவில்லை. அங்கேயும் போய்ப் பேசினான்.

யாழ்ப்பாணத் தமிழ்ப் பெண்கள் இருவர் அவனது கூட்டங்களுக்கெல்லாம் வந்து கொண்டிருந்தனர். எப்படியாவது தங்கள் வீட்டில் விருந்து சாப்பிட வேண்டும் என்று அவர்கள் அவனை அழைத்தார்கள். புறப்படுகின்ற அன்று மதிய உணவை அங்கே அவன் முடித்துக்கொண்டான். அங்கிருந்து நேரேவிமான நிலையத்துக்கு வந்து சேர்ந்தான்.

பெருங் கூட்டமாக மற்றவர்கள் வந்திருந்து வழியனுப்பினார்கள். திரு ஏ. வி. மெய்யப்பன் அவர்கள் கூட சிங்கப்பூரிலே தங்கியிருந்தவர், விமான நிலையத்துக்கு வந்திருந்தார்.

அவர் ஏர் ஃபிரான்ஸ் கோபாலை வழியனுப்புவதற்கும், அவனைப் பார்ப்பதற்குமாக விமான நிலையத்தில் காத்திருந்தார்.

எல்லோரிடமும் விடை பெற்று அவன் புறப்பட்ட போது இனிய நினைவுகள் அவனைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டன.

மீண்டும் அவன் சென்னை வந்து சேர்ந்ததும், தமிழகத்தினுடைய அரசியல் அவனை இழுத்துக் கொண்டது. ஆனால் அதிலே அவன் ஈடுபடுவதற்கு முன்னாலே, தான், மலேஷிய நாட்டிலும் சிங்கப்பூரிலும் கண்ட காட்சிகளை விவரிப்பதிலும், அது பற்றிப் புகழ்ந்து புகழ்ந்து பேசுவதிலும் சில நாட்களைச்செலவழித்தான்.

மலேஷியச் சுற்றுப் பயணத்துக்குப் பிறகு அவனது நடை உடை பாவனைகளே மாறியிருந்தன.

அதுபோலவே பல வெளி நாடுகளுக்கும் செல்ல

✖ ஈ. வி. கே. சம்பத்



வேண்டும் என்கிற ஆசையும் அதிகமிருந்தது.

அந்தச் சூழ்நிலையில், ஸ்தாபன காங்கிரஸிலிருந்து மீண்டும் ஒரு கூட்டம் பிரிந்து, இந்திரா காங்கிரஸிலே சேரவேண்டும் என்று விரும்பிற்று. அந்த விருப்பத்தை உண்டாக்கியவர் திரு சம்பத் அவர்கள்.

'71 பொதுத் தேர்தலில் ஸ்தாபன காங்கிரஸ் படுதோல்வி அடைந்த பிற்பாடு இனி காங்கிரஸ் என்பது இந்திரா காங்கிரஸ் ஒன்றுதான் என்று கண்டு, அதிலே இணைவது என்று அவர் முடிவு கட்டினார். ஆனால், அவரை ஆதரித்து அவரோடு வருவதற்குப் பெரிய கூட்டம் ஒன்றும் தயாராக இல்லை. அவரது வழக்கம் போலவே போஸ்ட் கார்டு மூலம் மற்றவர்கள் கருத்தை அறிவது, என்று முடிவு கட்டி, பல பேரையும் எழுதச் சொன்னார். ஆனால் அதற்காக வந்த பதில் மிகவும் குறைவாகவே இருந்தது.

''காங்கிரஸில் நாம் சேரலாம்'' என்று அவரோடு சேர விரும்பியவர்கள் மிக மிகக் குறைவாகவே இருந்தார்கள். முக்கியமான நண்பர்கள், நெடுமாறன் போன்றவர்கள், அதிலே சேரவில்லை. சம்பத்தை எப்போதும் மதிக்கின்ற எம். பி. எஸ். போன்றவர்கள் அதிலே இருந்தார்கள்.

அந்த இணைப்பு முயற்சிக்கும் அவனே ஆதரவு கொடுத்தான்.

இத்தனைக்கும் அரசியல் ரீதியாகவும், தனி நட்பு ரீதியாகவும் சம்பத் அவனிடம் முறையாக நடந்து கொண்டதில்லை என்ற மனக்குறை அவனுக்கு உண்டு. ஆனால், இந்திரா காங்கிரஸில் அவர்கள் இணைய வருவதை யாரும் தடுத்துவிடக் கூடாது என்கிற ஆதங்கமும் அவனுக்கு இருந்தது.

அதற்கு முன்னாலே நடந்த ஒரு கமிட்டிக் கூட்டத்தில் திரு ஓ. வி. அழகேசன் அவர்கள், மற்றவர்கள் இந்திரா காங்கிரசுக்குள்ளே நுழைவதைக் கடுமையாக எதிர்த்துப் பேசினார்கள். அதனைக் கண்டித்து அதே சபையிலேயே அவனும் பேசினான். பிறகு பக்தவத்சலம் அவர்களுக்கும் பதில் சொன்னான். சி. எஸ். அவர்கள் இடை இடையே குறுக்கிட்டு அவனை அமைதிப்படுத்திக் கொண்டிருந்தார்.

ஆகவே, சம்பத்துக்கும் மற்றவர்களுக்கும் இந்திரா காங்கிரஸின் கதவுகளைத் திறந்துவிட்ட பெருமை அவனைச் சாரும். அதை அவன் காங்கிரஸில் சேருவது என்று குறிப்பிடவில்லை. சம்பத் அதை இணைப்புக் கூட்டம் என்றே குறிப்பிட்டார்.

நூற்றுக்குத் தொண்ணூறு பேர் வராமல் பத்துப் பேர் மட்டும் இணைவதை எப்படி இரு காங்கிரஸ் இணைப்பு என்று மற்றவர்கள் ஏற்றுக் கொள்வார்கள்?

ஆனால் இரு காங்கிரஸ் இணைப்பு என்ற பேரிலேயே சேலத்தில் ஒரு கூட்டத்தை நடத்துகின்ற பொறுப்பும் திரு எம். பி. சுப்பிரமணியத்தின் தலையிலேயே விழுந்தது. அவரே ஆடி, ஓடி, அங்கே இங்கே வசூல் செய்து அக் கூட்டத்தை நடத்தி முடித்தார்.

அந்தக் கூட்டத்துக்கும் அவனே சென்று நாடகமும் நடத்திக் கொடுத்து அனைவரையும் வரவேற்றான்.

அந்தக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தவர்களில் வாழப்பாடி ராமமூர்த்தியும் ஒருவராவார். மிகக் குறைந்த பேர்களேயானாலும் கூட இவர்கள் வருகை ஒரு கணிசமான நல்லபிப்பிராயத்தை நாட்டில் உண்டாக்கிற்று. சம்பத் பற்றி ஒரு தப்பான அபிப்பிராயம் பரவிற்று என்றாலும் இந்தச் சூழ்நிலையில் அதுதான் சரியான முடிவு என்று எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதற்கான நியாயமான காரணங்களையும் சம்பத் விளக்கினார்.

'71 பொதுத் தேர்தலின்போது நாம் என்ன சொன்னோம்? இந்தத் தேர்தல் எது உண்மையான காங்கிரஸ் என்பதைக் காட்டிவிடும் என்றுதானே சொன்னோம்? தேர்தலிலே மக்கள் இந்திராவுக்கு வாக்களித்து விட்டார்கள். அதுதான் உண்மையான காங்கிரஸ் என்று கூறி விட்டார்கள். ஆகவே அதையே உண்மையான காங்கிரஸ் என்று ஏற்றுக் கொண்டு, அங்கே போய்விடுவதிலே தவறு என்ன? என்று அவர் கேட்டார். அது தலைவர் காமராஜருக்குச் சொன்ன பதிலாக அமைந்தது. இரண்டு காங்கிரஸ் இணைப்பு என்கிற பேரிலே ஒரு கூட்டம் இந்திரா காங்கிரசுக்குள் நுழைவதற்கு அவனும் காரணமாக இருந்தார்.

அந்தக் கூட்டம் நடந்து முடிந்த சில மாதங்களில் அவனுக்குத் தலைவர் காமராஜர் அவர்களிடமிருந்து டெலிபோன் வந்தது. ''ஏன் உன்னுடைய பிறந்த நாளை நீ இந்த ஆண்டு நடத்தவில்லை?'' என்று அவர் கேட்

## இருட்டடிப்பு!

மாவீரன் அலெக்சாந்தர், ஜூலியஸ் சீசர், நெப்போலியன் ஆகிய மூவரும் திடீரென்று உயிர்பெற்று வந்து ரஷ்யாவின் தலைநகரான மாஸ்கோவில் ராணுவ ஊர்வலத்தைப் பார்க்க நேர்ந்தால் என்ன பேசிக்கொள்வார்கள்?

அலெக்சாந்தர்: ''என்னிடம் இதுமாதிரியான ராணுவடாங்குகள் இருந்திருந்தால் ஆசியா கண்டம் பூராவற்றையும் நான் வெற்றி கொண்டிருப்பேன்!''

சீசர்: ''என்னிடம் இம்மாதிரியான ஏவுகணைகள் இருந்திருந்தால் உலகம் பூராவற்றையும் நான் ஆட்சி செய்திருப்பேன்!''

'பிராவ்தா' பத்திரிகையின் பிரதி ஒன்றைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த நெப்போலியன்: இப்படிப்பட்ட செய்தித்தாள் மட்டும் என் நாட்டில் இருந்திருந்தால் வாட்டர்லூ சண்டை பற்றிய விவரங்களை உலகமே அறியாமல் செய்திருப்பேன்!''

- பி. நாராயணன்

நன்றி: பாப்டிஸ்ட் நியூ மெக்ஸிகன்



டார். அவனது கண்களில் கண்ணீர் மல்கிற்று. எவ்வளவு தூரம் இடைவெளி இருந்தாலும் கூட அந்த உணர்ச்சியை அவர் விட்டுவிடவில்லை. அந்த அன்பை அவர் மறந்துவிடவில்லை. அவனுடைய பிறந்த நாள் என்றால் தான்தானே வாழ்த்துச் சொல்வோம்; ஏன் இந்த ஆண்டு அமைதியாக இருக்கிறது என்று எண்ணியே அவனுக்கு டெலிபோன் செய்தார்.

''இல்லை ஐயா, நீங்கள் இல்லாமல் அந்த விழாவை நான் எப்படி நடத்துவது? அதனாலே நான் நடத்தவில்லை'' என்று அவன் கூறினான்.

''சே! சே! நான் வருகிறேன். நீ நடத்து'' என்று அவர் சொன்னார். உடனே அவன், வழக்கமாக அந்த விழாவை நடத்துகின்ற திரு டி. பார்த்தசாரதி செட்டியாரையும், மற்றவர்களையும் சேர்த்துக் கொண்டு அந்த விழாவைத் தொடங்கினான்.

அந்த விழாவிலே தலைவர் காமராஜ் அவர்களும், ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களும் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்களும் மற்றவர்களும் கலந்து கொண்டார்கள்.

மீண்டும் தலைவர் காமராஜர் அவர்களோடு அவனுக்கு நெருக்கமான உறவு ஏற்பட்டது. ''என்றைக்கிருந்தாலும் ஸ்தாபன காங்கிரஸ் எவ்வளவுதான் தோற்றாலும் காமராஜரை விட்டு விட்டு ஒரு அரசியலை இந்தியா நடத்த முடியாது'' என்று அவன் மேடையிலே கூறினான். தலைவர் காமராஜரைப் பற்றிய அந்த உணர்வு அவனுக்கு எப்போதும் உண்டு. ''காமராஜ் எடுத்த முடிவுகள் தவறாக இருக்கலாம், ஆனால் காமராஜ் என்கிற உத்தமமான உன்னதத் தலைவரை விட்டு விட்டு இந்திய அரசியல் இயங்க முடியாது'' என்பதிலே அவனுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது.

அந்தப் பேச்சைக் கேட்டு காமராஜருக்குக் கூட ஒரு திருப்தி இருந்தது.

ஆனால், அவனைப் பற்றி இரண்டு வித அபிப்பிராயங்கள் பரவலாயின.

அவன் காங்கிரஸ் என்ற பேரிலே எங்கே மேடை போட்டாலும் ஏறிவிடுகிறான் என்று பலபேர் கருதினார்கள். உண்மையும் அது தான். காங்கிரஸ் என்று கூறிக் கொண்டு யார் கொடியைப் போட்டாலும், அந்தக் கொடியின் நிழலிலே போய் நிற்க அவன் தயங்கியதே கிடையாது. காங்கிரஸ் ஒன்றாகவே இருக்க வேண்டும்; அது ஒன்றே நாட்டை ஆளவேண்டும் என்பதிலே, அன்று முதல் இன்றுவரையிலே அவனுக்கு ஒரே அபிப்பிராயம்தான். இந்திரா காங்கிரஸாயினும், ஸ்தாபன காங்கிரஸாயினும், எது ஜெயிப்பதாயினும் அவன் அதிலே ஒத்துழைக்கத் தயார்.

காங்கிரஸ்காரனை விட ஒருவன் உன்னதமாக இருந்தால் அவனால் தாங்கமுடிவதில்லை. காங்கிரஸை விட ஒரு கட்சி உயரத்திலிருந்தால் அதை அவனால் பொறுக்க முடிவதில்லை. காங்கிரஸின் மீது அவனுக்கு ஏற்பட்ட பற்றுதல் வெறியாகவே மாறியிருந்தது. அந்த வெறித்தனத்தின் விளைவுதான் இந்திரா காங்கிரஸ் மேடையிலேயும் அவனைத் தோன்ற வைத்தது, ஸ்தாபனக் காங்கிரஸ் மேடையிலேயும் அவனைத் தோன்ற வைத்தது.

தலைவர் காமராஜர் அவர்களுடைய அந்த ஆண்டு பிறந்த தின விழாவை பிரம்மாண்டமாகக் கொண்டாட வேண்டும் என்று அவன் முடிவு கட்டினான். ஆகவே மற்றவர்களைச் சேர்த்துக் கொண்டு அதைக் கொண்டாடினான். ஒரு இசைத்தட்டு கொடுக்க வேண்டுமென்று காங்கிரஸ்காரர்கள் விரும்பினார்கள். நல்ல இசைத்தட்டு ஒன்றும் பதிவுசெய்து வெளியிடப்பட்டது. (வளரும்)

---

அருள்வாக்கு

## பணத்தை விட்டுக் குணத்தைக் கொள்க!

'நாகரிக வாழ்க்கை' என்கிற பெயரில் ஏதோ ஒன்றுக்கு ஆசைப்பட்டுக் கொண்டு இப்போது பல நல்ல வழிகளை விட்டு விட்டோமே என்பதை நினைத்தால் தான் பரிதாபமாக இருக்கிறது. நாகரிக மார்க்கத்தில் போய்க் கொண்டிருந்த மேல் நாட்டில் பலர் வாழ்க்கையின் நிறைவு இதில் இல்லவே இல்லை என்று சலிப்படைந்து, நம்முடைய வேதாந்தம், பக்திமுறை இவற்றுக்குத் திரும்ப ஆரம்பித்திருக்கிறார்கள். நாமோ அநாதிகாலமாக நமக்கு வந்துள்ள அற்புதமான பித்ரார்ஜிதத்தை அலட்சியம் செய்து, மேல் நாட்டுக்காரர்கள் வேண்டாம் என்று கழித்துக் கட்டியதை எடுத்துக் கொள்கிறோம்.

இத்தனை கோளாறுகளுக்கும் மூலம் பணமே பெரிதாகி விட்டதுதான். இனியாவது பணத்தில் பற்றுதலை விடவேண்டும். சத்குணங்களைச் சம்பாதிக்கப் பாடுபடவேண்டும். அப்போதுதான் ஜன்மா எடுத்த பலனை நாம் அடைந்து லோகத்துக்கும் உபகாரம் செய்தவர் ஆவோம்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்



# விழுதுகள் வீணாகிப் போனால்...

கமலா நடராசன்

காலையில் எழுந்தபோது சந்தானத்துக்கு உடல்நிலை சரியில்லாதது போல் தெரிந்தது. இன்று கடைக்குச் சென்று வர முடியுமா எனக் கவலை விரித்தது.

ஒன்பது மணிக்கெல்லாம் அங்கு இருக்க வேண்டும். இல்லாவிட்டால் முதலாளிக்கு ஏக கோபம் வந்துவிடும். முன்பு இரண்டொரு முறை கால தாமதமாகச் சென்றபோது, ஜாடையாகப் பேசினார். பிறகு நேரிடையாகவே கண்டித்தார். அன்றைக்கு இருந்த மனநிலையில் சந்தானம் அவரிடம் ஏதோ எதிர் வார்த்தையாடப் போய் வீட்டுக்கு வரும்படி ஆகிவிட்டது.

நான்கே நாட்கள்தான்.

பட்டினி அரக்கன் அந்த வீட்டில் புகுந்து படுத்தி வைத்த பாட்டில், மரியாதை ரோசம் போன்ற மதிப்புக்குரிய நண்பர்கள் எல்லாம் அவரிடம் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப் போக, இவர் முதலாளியின் கால்களில் மீண்டும் போய் விழுந்தார்.

அதிலிருந்து அதிக ஜாக்கிரதை.

இப்போது—

எழுந்தவர் வெளியே வந்தார். அடுக்களையை எட்டிப் பார்த்தார். சரஸ்வதி ஈர விறகை ஊதி ஊதி எரித்துக் கொண்டிருந்தாள்.

ரேழியைக் கடந்து கொல்லைப்புறம் வந்த போது—

சாரங்கன் — மூத்த மகன் — கிணற்றடியில் ஊதிக் கொண்டிருந்தான் சிகரெட்டை!

மறுபுறமாகத் திரும்பியவர் கனைத்தார்.

மகன் சிகரெட்டை மறைத்து அணைத்தான்.

தலைக்கு மேல் வளர்ந்து விட்டவன், அந்த அளவுக்காவது தன்னிடம் மரியாதை வைத்திருக்கிறானே.

"அடுப்புக்கு விறகு இல்லையாமே, அம்மா சொன்னா" — எங்கோ பார்த்தபடி அவன் சொல்ல இவர் பெருமூச்செறிந்தார்.

விறகில்லை என்று சொன்ன மகன் வீட்டுக்குள் போய்விட்டான், தன் பொறுப்புத் தீர்ந்து போனது என்ற கருத்தில்.

தினமும் காலை ஐந்தரை மணிக்கெல்லாம் எழுந்து விடுபவர், இன்று ஏழு மணிக்குத்தான் எழுந்திருக்கிறார். என்ன செய்கிறது என்று கேட்கக்கூட சரஸ்வதிக்குப் பயம். அவரும் எது செய்தாலும் யாரிடமும் சொல்வதில்லை.

சொல்லி ஆகப்போவது என்ன?

அந்த வீட்டுப் பிரச்னைகளின் ஆரம்பமோ முடிவோ அவரிடம்தான் என்று ஆகிவிட்ட பிறகு யாரிடத்தில் எதைச் சொல்வது?

சரஸ்வதி பற்பொடியைக் கொடுத்து விட்டுத் தண்ணீர் இறைத்து வைத்தாள். செம்பை எடுத்துக் கொடுத்தாள்.

கிணற்றங்கரை ஓரமிருந்த குப்பை மேட்டில் கோழி ஒன்று தன் குஞ்சுகளைக் கொத்தி விரட்டிக் கொண்டிருந்தது.

பக்கத்து வீட்டுக் கோழி.

போன மாதமெல்லாம் அது தன் குஞ்சுகளைக் கூட வைத்துக் கொண்டு மேய்ந்தது. குப்பைக் கூளங்களைக் கிளறிவிட்டு, குஞ்சுகள் மேய வழி செய்தது. ஆர்வத்தோடு அவை புழுக்களையும், தானியங்களையும் கொத்தித் தின்னுவதை ரசித்தது.



ஒரு குறிப்பிட்ட காலம்தான்.

இப்போது அந்தக் குஞ்சுகள் வளர்ந்து விட்டன. ஆகாரத்துக்காக அதிக அளவு தானியங்களைத் தின்னத் தொடங்கி விட்டன. தங்களுக்கான உணவைத் தாங்களே தேடிக் கொள்ளும் பக்குவத்துக்கும் வந்துவிட்டன. இன்னமும் அவற்றை அதுவே சேர்த்துக் கொண்டு மேய்வதானால் பிறகு இதன் கதி?

கொத்தி விரட்டுகிறது.

சரஸ்வதியும் சந்தானமும் அனுதாபப்பட்டார்கள்.

கோழியிடமா குஞ்சுகளிடமா? அவர்களுக்கே புரியவில்லை.

பல் துலக்கிவிட்டு அவர் உள்ளே நுழைந்த போது அடுக்களையில் விறகு வாங்கும் படலம் தொடங்கி இருந்தது.

''நாங்க போனாத்தான் எடையிலே ஏமாத்திடறானே. எப்பவும் போல அப்பாவையே வாங்கிட்டு வரச் சொல்லு.''

''நான் போவேன், போன தடவையே முப்பத்தஞ்சு ரூபாய் பாக்கின்னான். இப்போ எந்த மூஞ்சியோட அவன் கிட்டப் போய் நிக்கறது?''

''விறகுக் கடை மட்டுமா? நேத்து நான் வந்தப்போ மளிகைக் கடைக்காரன் வழியில் நிறுத்திப் பணம் கேட்கிறான். சே, வெளியே கிளம்ப வெட்கமா இருக்கு.''

வலிக்கிறது. நெஞ்சிலோ மனத்திலோ ஏதோ ஓர் இடத்தில்!

கும்பகோணம் டவுன் பஸ் ஸ்டாண்டில் கூட்டம் நிரம்பி வழிந்தது.

அவர் தெருவில்கடைசி வீட்டில் இருக்கும் கிருஷ்ணன். எப்போதும் கறுகறுப்பான முகம் கொண்ட இருபது வயது இளைஞன்.

பஸ் ஸ்டாண்டில் ஒரு சின்னப் பழக்கடை.

இரண்டு வருடங்களுக்கு முன் அவன் அப்பா சிவகுருநாதன் பக்கவாதத்தில் விழுந்துவிட்டார். வயதுக்கு



வந்ததும் நராததுமாக மூன்று பெண் குழந்தைகள். மொத்தக் குடும்பமும் இன்று இவன் தலையில். சுமக்கிறான்!

வாழ்க்கையை ஒரு சவாலாக ஏற்றுக்கொண்டு வைராக்கிய உணர்வோடு மிக அநாயாசமாகச் சமாளிக்கிறான். போன மாதம் ஒரு தங்கையின் கல்யாணத்தையும் முடித்து விட்டான்.

பஸ் வந்து விட்டது.ஏகக் கூட்டம்.

கிருஷ்ணன் உடனடியாக ஓடி ஏறினான். இடம் பிடித்து உட்கார்ந்து கொண்டான்.

''வாங்க மாமா.''

அவன் அழைத்தான். அவர் மெள்ள ஏறி வந்த பிறகு அந்த இடத்தை அவருக்குக் கொடுத்து உட்கார வைத்துவிட்டு இறங்கிப் போனான். அந்த யாரோ பெற்ற பிள்ளையின் அன்பு அவரை நெகிழச் செய்தது.

காந்தி பார்க் அருகில் பஸ் நின்றது.

உட்கார்ந்து வந்தது கூடக் களைப்பாகத் தெரிந்தது. கம்பியைப் பிடித்துக்கொண்டு இறங்கியவர் தடுமாறினார்.

''பெரியவரே பார்த்து....''

அவரை விட வயதானவர் யாரோ அவருக்குக் கை கொடுத்து உதவினார். சந்தானம் நன்றி சொல்லிவிட்டு மெள்ள நடந்தார்.

அந்தப் பெரிய ஓட்டலின் வாசல் ஓரம் அந்தச் சிறுவன்.

செருப்புத் தைப்பவன்.

சில சமயங்களில் அவனோடு அவனுடைய வயதான தகப்பனும் இருப்பான். பல சமயங்களில் இவன் மட்டுமே. ஒரு முறை பத்துக் காசு பேரத்தில் தம்முடைய வார் அறுந்த செருப்பை இவனிடம் தைத்துக்கொள்ள மறுத்து வேறு இடத்தில் இவன் கேட்ட தொகைக்கும் பதினைந்துகாசு அதிகம் கொடுத்துத் தைத்துக் கொண்டு போனவர் சந்தானம்.

திடீரென்று அவர் கண் முன் அந்த ரஸ்தாவும் போக்குவரத்துக்களும் சுழலத் தொடங்க—

சட்டென்று ஒரு ஜாக்கிரதை உணர்வில் அவர் அவன் ஓரமாகச்சென்று உட்கார்ந்து...

கண் விழித்தபோது—

அவன் சோடா ஒன்றை உடைத்து அவர் முகத்தில் தெளித்துவிட்டு வாயில் கொஞ்சமாகப் புகட்டிக் கொண்டிருந்தான்.

''என்னங்க செய்யுது?''

''ஒண்ணுமில்லே. கொஞ்சம் மயக்கம்.''

எழுந்து உட்கார்ந்தார்.

''எங்கே போகணும்?''

கொஞ்சம் யோசித்தார். 'வீட்டுக்கே போய்விட வேண்டியதுதான்'.

விவரம் சொன்னார். பையன் சைக்கிள் ரிக்ஷா ஒன்றைப் பேசி விட்டான்.

சந்தானம் பையைத் துழாவிக் கிடைத்த ஐம்பது காசை அவனிடம் கொடுத்தார். சோடாவுக்காக.

அவன்: ''விளையாட்டா லேடி டைப்பிஸ்ட்டுடம் போய் ஐ லவ் யூ சொன்னேன்!''

இவன்: ''என்ன ஆச்சு...?''

அவன்: ''விளையா முடிஞ்சிடுச்சு...! எனக்கு ரொம்ப சந்தோஷம்னுட்டா அவ!''

- உ. ராஜாஜி



''வேண்டாங்க. இதுக்கெல்லாம் யாராவது காசு வாங்குவாங்களா? எங்க அப்பாவுக்கு ஒண்ணுன்னு இதே மாதிரி யாராவது உதவ மாட்டாங்க?''

கண்களில் கண்ணீர் பனிக்க சந்தானம் ரிக்ஷாவில் அமர்ந்தார்.

சரஸ்வதி பதைத்துப் போனாள்.

டாக்டரிடம் கூட்டிப் போகப் பையன் களைத் தேடினாள். முடிவில் அதே ரிக்ஷாவில் வைத்துத் தானே அழைத்துப் போனாள்.

இரத்தக் கொதிப்பு. இதய பலவீனம்!

டாக்டர் ஊசிபோட்டார். நிறைய மருந்து மாத்திரைகள் எழுதிக் கொடுத்தார். நீண்ட நாட்கள் ஓய்வு தேவை என்றும் சொல்லி அனுப்பினார்.

சந்தானம் படுக்கையில் விழப்போக—

சரஸ்வதி படாத பாடு பட்டுக் கொண்டிருந்தாள்.

அன்று பெரியவன் செய்தி கொண்டு வந்தான். 'அப்பாவின் இடத்தில் ஜவுளிக் கடையில் வேறு ஆள் போட்டு விட்டார்களாம்.'

''இனிமே என்னம்மா செய்யறது?''

அடுத்தவனும் சின்னவனும் அதிகக் கவலைப்பட்டார்கள்.

சரஸ்வதிக்கு ஒரே பிரார்த்தனை சந்தானம் எழுந்து உட்கார வேண்டுமே என்று.

அந்தப் பிரார்த்தனைக்கும் அவள் பட்ட பாட்டுக்கும் பலனோ என்னவோ அவர் எழுந்து உட்கார்ந்து விட்டார்.

ஒருநாள் சாரங்கன் சந்தோஷமாக வீட்டுக்குள் நுழைந்தான்.

''அம்மா! வேலே கிடைச்சுப் போச்சு! நெல் மண்டி ஒன்றில் வரவு செலவு மேற்பார்வை. வேலே கொஞ்சம் அதிகம் தான். என்றாலும் மாதம் இருநூற்றைம்பது சம்பளம்.''

சரஸ்வதிக்குச் சந்தோஷம். ''எப்படியோ உனக்கு ஒரு வேலே கிடைத்த நேரம் மத்தவங்களுக்கும் கிடைக்கட்டும். இனிமேலாவது இந்தக் குடும்பம் கஷ்டம் இல்லாமல் இருக்கட்டும்.''

சாரங்கன் இடுக்கிட்டான். ''என்னம்மா சொல்றே, வேலே எனக்கா? சரியாப் போச்சு போ. இருந்திருந்தும்கணக்கெழுதும்வேலேக்கா என்னைப் போகச் சொல்றே? அப்பாவுக்காகத்தான். அந்த வேலேயை ரொம்பக் கெஞ்சிக் கூத்தாடிப் பேசி முடிச்சிருக்கேன். அவர் வேலே இல்லாமல் உட்கார்ந்த பிறகு இந்தக் குடும்பம் என்ன கதிஆயிட்டுது பாரேன்!''

சரஸ்வதி அதிர்ந்து போனாள்.

சந்தானம் விரக்தியோடு சிரித்தார்.

மறுநாள்—

இதோ சந்தானம் வேலேக்குப் புறப்படுகிறார். எத்தனையோ விழுதுகள் தாங்கி நிற்கும் மரமும் ஒரு நாள் விழப் போவது நிச்சயம். விழுதுகள் விலகிவிட்ட மரம் கொஞ்சம் சீக்கிரம் விழுந்துவிடப் போகிறது — விதியாசம் அதுதானே?

வேதாந்தம் அவருக்குக் கை கொடுத்தது



# ஒரு ஜோடி எருதுகள்

உலகத் தமிழ் மகாநாடு நடக்கப் போகிறது. தமிழனின் பெருமையை விளக்குவது போல் சென்னையில் உள்ள ஒவ்வொரு ஸ்டுடியோவிலிருந்தும் ஒரு அலங்கார வண்டி வர வேண்டும் என்று கோரினார் அண்ணா. பொறுப்பேற்றார் வாசன்.

எல்லா வண்டிகளும் தொடக்க நாளன்று ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து புறப்படுவதாகத் திட்டம். பகல் நேரத்தில் வெளிக் கொணர்ந்தால் பலர் முன்கூட்டியே பார்த்து விடுவார்கள் என்பதால் இரவு பன்னிரண்டு மணிக்கு எல்லா வண்டிகளும் அந்தந்த ஸ்டுடியோவை விட்டு நகரத் தொடங்கின. வெலிங்டன் தியேட்டருக்கு எதிரில் அவை வந்து சேர வேண்டும் என்று ஏற்பாடு. அங்கே ஸ்டுடியோ முதலாளிகளான நாகி ரெட்டியார், மெய்யப்பச் செட்டியார் ஜெமினி அதிபர் எஸ். எஸ். வாசன், மெஜஸ்டிக் ஸ்டுடியோ ஏ. எல். சீனிவாசன் ஆகிய நான்கு பேர்களும் அலங்கார வண்டிகளுக்காகக் காத்திருந்து காத்திருந்து வராததால் கால் கடுக்கவே நடுரோட்டிலேயே உட்காரலாம் என்று முடிவு செய்தார்கள்!

உட்கார்ந்தவுடன் நாகி ரெட்டி சிரித்தார். ''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று மெய்யப்பச் செட்டியார் கேட்டார். ''இப்போது தெருவில் உட்கார்ந்திருக்கும் நாம் நாலு பேருமே நடுத் தெரு நாராயணர்களாக இருந்தவர்கள்தாமே என்று நினைத்தேன்! சிரிப்பு வந்தது'' என்றார்.

இந்தச் சம்பவத்தை நினைவுகூர்ந்த நாகி ரெட்டி மேலும் தொடர்ந்தார்:

''கடப்பை ஜில்லா கொண்டபுரம் அருகில் கொத்த பல்லே என்ற சிறு கிராமத்தில் நான் பிறந்தேன். வசதியான குடும்பம் எங்களுடையது. 600 ஏகரா நிலத்துக்குச் சொந்தக்காரர் எங்கள் தாத்தா பொம்மி ரெட்டி நரசா ரெட்டி. எங்கள் வீட்டுக்கு எதிரில் ஒரு கொல்லப் பட்டறை. சுற்றுப்புறம் 10 அல்லது 15 கிராமங்களிலுள்ள விவசாயிகள் விவசாயக் கருவிகளைப் பழுதுபார்க்க அங்குதான் வருவார்கள். வர்றவங்க, போறவங்களுக்குச் சாப்பாடு போட்டு உபசரிப்பார் தாத்தா. அப்படி வாழ்ந்தவர் ஆறு ஏகரா நிலத்தையும் ஒரு ஜோடி மாடும் ஒரு வண்டியும் மட்டுமே என் அப்பாவுக்கு வைத்துவிட்டுப் போனார். எங்க கிராமத்துக்கு 20 மைல் தூரத்தில் உள்ள தாடி பத்திரிக்கு வண்டியை வாடகைக்குஓட்டிவந்தார் அப்பா. தாடிபத்திரியில் வேர்க்கடலை பருத்தியை ஏற்றிக் கொண்டு பலர் போவதைக் கவனித்த எங்கப்பா நாமும் ஏன் இதைப் போல வியாபாரம் செய்யக் கூடாது என நினைத்து ஆரம்பித்தார். வியாபாரம் பெருகியது. நானும் எங்கப்பாவும் சென்னை வந்து சேர்ந்தோம். சென்னையிலிருந்து சிங்கப்பூர், பர்மா, கோலாலம்பூர் முதலிய இடங்களுக்கு வெங்காயம் ஏற்றுமதி செய்தோம். வியாபார விஷயமாக நான் பர்மாவுக்குச் சென்றிருந்தேன். நல்ல முறையில் நடந்து வந்த வெங்காய வியாபாரம் 1940-41ல் மிகுந்த நஷ்டத்தைச் சந்தித்தது. நகை, நட்டு, வீடு வாசல் எல்லாம் விற்றுக் கடன் அடைக்க வேண்டியதாயிற்று.

''மறுபடியும் கடப்பா ஜில்லாவில் பழைய வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தோம். கஷ்டம் எங்களை விட்டுப் போவதாக இல்லை. அப்பொழுது நண்பர்கள் சிலர் சென்னை ஆச்சாரப்பன் தெருவில் இருந்த பி. என். கே. பிரஸ்ஸைத்திரும்பவும் நடத்த உதவினார்கள். அப்போதைய வாகினி ஸ்டுடியோவின் முதலாளி மூலா நாராயணசாமி, நஷ்டத்தின் விளைவான பிரச்னைகளுடன் கோர்ட்டுக்கும் ஸ்டுடியோவுக்குமாக அலைந்து கொண்டிருந்தார். ஸ்டுடியோவைச் சரிவர நிர்வகிக்க முடியாத நிலையில் அதைக் குத்தகைக்கு எடுத்துக்கொள்ளுமாறு என்னை உற்சாகப்படுத்தி

○ பி. நாகிரெட்டி



ளூர். நான் எடுத்துக்கொண்ட சில காலத்துக்குள் அவர் மறைந்தார். அவர் பட்டிருந்த கடன்களை நான் அடைப்பதாக ஒப்புக்கொண்டு ஸ்டுடியோ முதலாளி ஆனேன். கடன்களை அடைப்பது எப்படி? அதற்குப் படம் எடுப்பதுதான் ஒரே வழி! இப்படித்தான் நான் தயாரிப்பாளர் ஆனேன். நான் எடுத்த முதல் படம் பாதாள பைரவி. வெற்றிகரமாக ஓடியது. அதன் பிறகு வரிசையாகப் பல படங்கள்.''

ஜார்ஜ் டவுனில் நான்கு பேர்களுடன் ஆரம்பித்த பிரிண்டிங் பிரஸ் இன்று இரண்டாயிரம் தொழிலாளிகள் வேலை செய்யும் அளவுக்குப் பல்கிப் பெருகியிருக்கிறது. ஆண்டொன்றுக்குப் பதினைந்து லட்ச ரூபாய் பெறுமானம் உள்ள மை தேவைப்படுவதால் அதையும் இவர்களே தயாரித்து விடுகிறார்கள். லாரி, வான், கார் முதலியவை நூற்றுக் கணக்கில் இருப்பதால் அவை பழுதுபட்டால் சரி செய்ய சர்வீஸ் ஸ்டேஷன், ஒர்க்ஷாப், பெட்ரோல் பங்க் என்று தேவைகளை அனுசரித்து ஒவ்வொன்றையும் ஏற்படுத்திக்கொண்டார்கள். இத்துடன் பால் பண்ணை, கோழிப் பண்ணை, நர்சரி முதலியவைகளையும் உருவாக்கிறார்கள். எண்பது லட்ச ரூபாய் முதலீட்டில் விஜயா ஆஸ்பத்திரியையும் தொடங்கினார் நாகி ரெட்டி. இந்த முதலீட்டுக்கான பணம் திடீரென்று எப்படி வந்தது என்ற எண்ணம் எழலாம். பழைய படங்களை விற்றதால் கிடைத்த பணம் ஆஸ்பத்திரியாக உருமாறியது! இதில் 350 பேர்கள் வேலை செய்கிறார்கள். ஒரு மாதத்துக்கு நாலரை லட்சம் ரூபாய் செலவாகிறது. ஸ்டுடியோ, பிரஸ் முதலிய எல்லா ஸ்தாபனங்களையும் இயக்க மாதம் 20 லட்சம் ரூபாய் தேவைப்படுகிறது. 1000 ரூபாய் நன்கொடையுடன் மறுமலர்ச்சி அடைந்த பி.என்.கே. பிரஸ் எங்கே? மாதம் 20 லட்சம் தேவைப்படும் ஸ்தாபனங்கள் எங்கே? பிரமிக்கத் தக்க வளர்ச்சி அல்லவா!

விஜயா, வாகினி ஸ்டுடியோவில் இரண்டு அழகிய காளைகள் வாலைத் தூக்கிக்கொண்டு தலையைக் கீழே சாய்த்துச் சண்டைக்குத் தயாராய் நிற்பதைப் பார்க்கலாம். நாகி ரெட்டியின் இளமைக் கால நினைவுகளையொட்டி உருவான சிற்பம் அது. சிறு வயதில் மாலை வேளைகளில் வேலை செய்து விட்டுத் திரும்பும் காளைகளைக் கடுநீரில் குளிப்பாட்டித் தம் கையாலேயே தீனி போட்டு, தண்ணீர் காட்டிவிட்டுத் தானே நாகி ரெட்டி தாம் சாப்பிட உட்காருவார்!

—''சயன்''

# 'அரிச்சந்துருடு'

அன்று அரிச்சந்திர மகாராஜா விசுவாமித்திரரின் சினத்துக்கு ஆளாகிச் 'சுடலை' காத்தான். இன்று ஒரு கபட அரசியல்வாதியின் கோபதாபங்களுக்கு இலக்காகிய 'ஹரிச்சந்துருடு' 'மீன் சுடலை' காத்துத் தம் மகன், மகளை அரசியல் வேள்விக்குப்பலி கொடுத்து மீன் சுடலையில் எரிக்கும்படி ஆகிறது!

கட்சிக்குக் கட்சி தாவும் பரமேசுவர ராவ் அரசியல் திமிங்கிலம் மட்டுமல்ல. பெண்களின் கற்பைச் சூறையாடும் அரக்கன். பல கொலைகளைச் செய்யவும் அஞ்சாத கொடியர். விசுவாசமுள்ள வேலைக்காரி மாணிக்கமும் அவரது 'பசி'க்கு இரையாகிறாள். கடைசியில் வாழ்விழந்து, செல்வமிழந்து நடுத் தெருவில் நிற்கும் பரமேசுவர ராவுக்கு 'உணவு' அளிப்பவள் அந்த மகராசிதான்! உயிரிழந்து கிடக்கும் அந்தக் கபட அரசியல்வாதிக்குத் தன் மூக்குத்தியை அடகு வைத்து இறுதிக் கடன் செலுத்த முன்வருகிறாள். 'மீன் சுடலை' காக்கும் 'ஹரிச்சந்துருடு' மீன் சுடலை இந்த அயோக்கியனை எரித்தால் புனிதம் இழந்துவிடும் என்று மறுக்கிறார். அந்த அரசியல் துன்மார்க்கத் திமிங்கிலத்துக்குக் கடலே மசானமாகிறது!

கபட அரசியல்வாதியாக நடிப்பவர் பிரசாதராவ். இவரது முகமூடிகளைக் கிழிக்கிறார் ஹரிச்சந்துருடு.

''குக்கலுக்கு சூஸ்தானு'' பாட்டு அயோக்கியனுக்கு வோட்டுப் போடாதே என்று கேட்டுக்கொள்கிறது.

சாவித்திரி, ஹரிச்சந்துருடுவின் மனைவியாகத் தமது இறுதிப் படத்தில் நடித்து உள்ளத்தை உருக்குகிறார்!

'ஹரிச்சந்துருடு'வாக நடிக்கும் பிரபாகர் ரெட்டி உன்னத நடிப்பால் உள்ளத்தைத் தொடுகிறார். டம்ளர் நீரில் மிதக்கும் ஈயை உயிர் காத்துத் தம் கதாபாத்திர உயர்வை நவில்கிறார். டைரக்ஷன் திறமைக்கு ஒரு பதமான சோறு!

தயாரிப்பாளர் — டைரக்டர் யூ. விசுவேசுவர ராவ் 'நக்னசத்யம்' என்று மற்றொரு தெலுங்குப் படத்துக்கும் தேசிய விருது பெற்றவர்.

—பி. எஸ். எம்.



# பரம்பொருளின் பக்தன்



பாரதியார் இசைப் பாடல்களைத் தெய்வ பக்திக்காகவும் பாடுவதை விரும்பினார். வெறுக்கவில்லை. அவரேயும் தெய்வ பக்திப் பாடல்களை ஏராளமாகப் புனைந்து வைத்துள்ளார். ஆனால், ''பக்தி'' என்று சொல்லிக் கொண்டு உலக வாழ்க்கையை வெறுக்கும் பாடல்களையே சங்கீத அரங்குகளில் பாடுவதை அவர் வெறுத்தார். ''போதுமே வேதாந்தம்'' என்று ஒரு கட்டுரையில் இதைச் சலிப்போடு கூறியுள்ளார்.

பாரதி தான் பாடும்போதெல்லாம் அபிநயத்தோடு ஆடவும் செய்தானென்றால், பித்தனாகியதால் அல்ல! பரம்பொருளின் பக்தனாகியதால்! உண்மையான தெய்வ பக்தன் உலகோர் பார்வையிலே பித்தன்தான்! பாரதி, தான் பாடும்போதெல்லாம் நாதப் பிரம்மத்தோடு கலந்தான். அதனால்தான், அவன் தன்னை மறந்து கூத்தாடினான்!

பாரதியார் இசையறிஞராக மட்டுமல்லாமல் மெய்ஞ்ஞானியாகவும் விளங்கினார். பரம்பொருள் நாத மயமானது; நாதோபாசனையால் அதனோடு ஐக்கியமாக முடியும். அப்படி ஐக்கியமானவர்கள் பலர்— என்று பாரதியார் அறிந்திருந்தார்.

இந்தக் கொள்கையை உலக மதங்களிலே இந்து மதம் ஒன்றுதான் கொண்டிருக்கிறது. இந்த உண்மையை விளக்கிக் கூறும் ஆன்ம ஞான இலக்கியங்கள் இந்து மதத்தில்தான் இருக்கின்றன.

சங்கீத வித்வான்களெல்லாம் மெய்ஞ்ஞானியர் என்று சொல்வதற்கில்லை. ஆனால் மெய்ஞ்ஞானியரெல்லாம் இசை ஞானியராகவும் இருந்திருக்கின்றனர். இது இந்து மதத்தின் வரலாறு கூறும் உண்மை.

தேசியக் கவி பாரதியார் பிறந்த எட்டயபுரம் மண்ணுக்கே இசைஞானம் உண்டு. இசைப் பேரறிஞர் பலர் அங்கே பிறந்திருக்கிறார்கள். அவர்களிலே தலைசிறந்தவர் சுப்பராம தீட்சிதர். அவரிடம் அளவற்ற பக்தி கொண்டிருந்தார் சுப்பிரமணிய பாரதியார். அவர் பிறந்த மண்ணிலே தாம் பிறந்ததைப் பெருமையாகவும் கருதி வந்தார். சுப்பராம தீட்சிதர் இறந்தபோது தம் கண்ணீரால் கவிதை எழுதித் தீட்சிதருக்கு அஞ்சலி செலுத்தினார்.

'கன்னனொடு கொடை போயிற்றுயர்
கம்பநாடனுடன் கவிதைபோயிற்று
உன்னரிய புகழ்ப் பார்த்தனொடு
வீரமகன்றதென உரைப்ப
ரான்றோர்
என்னகநின் நகலாதோன்
அருட்சுப்ப ராமனெனும்
இணையிலா விற்பன்னனொடு
சுவைமிகுந்த
பண்வளமும் அகன்றதெனப்
பகரலாமே!

பிறந்த மண்ணுக்குரிய இசை ஞானத் தாலோ என்னவோ, பாரதியாரும் இசைச் சாத்திரத்திலும் சரித்திரத்திலும் பிறவி அறிஞராக விளங்கினார். பாட்டும் கூத்தும் அவருக்கு எட்டயபுரம் தந்த செல்வங்களாக இருந்தன.

''குயிற் பாட்டு'' என்னும் குறுங் காப்பியத்திலே இசை பற்றிய செய்திகளை யெல்லாம் குவித்து வைத்துள்ளார். இதோ பாரதியார் கூறுகிறார்:

'கானப் பறவை கலகலெனு
மோசையிலும்
காற்று, மரங்களிடைக் காட்டு
மிசைகளிலும்
ஆற்றுநீ ரோசை அருவியொலியினிலும்
நீலப் பெருங்கடலெந் நேரமுமே
தானிசைக்கும்
ஒலத்திடையே யுதிக்கு மிசையினிலும்
மானுடப் பெண்கள் வளருமொரு
காதலினால்
ஊனுருகப் பாடுவதி லூறிடுந் தேன்
வாரியிலும்,
ஏற்றநீர்ப் பாட்டி னிசையினிலும்
நெல்லிடிக்கும்
கோற்றொடியார் குக்குவெனக்
கொஞ்சு மொலியினிலும்
சுண்ண மிடிப்பார்தஞ் சுவை மிகுந்த
பண்களிலும்
பண்ணை மடவார் பழகுபல
பாட்டினிலும்,
வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள்
தாமொலிக்கக்
கொட்டி யிசைத்திடுமோர் கூட்டமுதப்
பாட்டினிலும்
வேயின் குழலோடு வீணை முதலா மனிதர்
வாயினிலும் கையாலும் வாசிக்கும்
பல்கருவி
நாட்டினிலும் காட்டினிலும்
நாளெல்லாம் நன்றொலிக்கும்
பாட்டினிலும் நெஞ்சைப்
பறிகொடுத்தேன்....'

ஓரறிவுள்ள தாவரத்திலிருந்து ஆறறிவுடைய மானிடர் வரை எழுப்பும் ஓசை ஒலியெல்லாம் இறைவனுடைய நாத கீதமாகவே கவிஞருக்குப் படுகிறது.

ம.பொ.சி

(மயிலை இலக்கிய வட்டம் பாரதீய வித்யா பவனச் சொற்பொழிவிலிருந்து)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran



ரூ. 2,650/-*

BM-6744 TM

## இப்போது! சின்னஞ்சிறு ஐஸி-க்கள் காரணமாக அபாரமான செவியின்பம்!

புதிய பிலிப்ஸ் ஹை-ஃபை இன்டர்நேஷனல் ஸ்டீரியோ சிஸ்டம் ஏ.எப் 592

மைக்ரோ எலெக்ட்ரானிக்-ஸின் அற்புதமான அம்சங்கள்: இரண்டு சின்னஞ் சிறு ஐஸி-க்கள் (இன்டெக்ரேட்டெட் சர்க்கியூட்டுகள்) சர்க்கியூட்ரி முழுவதையும் சமாளிக்கின்றன—தெள்ளத் தெளிவான ஒலியைக் கேட்க உபரியான சாதனங்கள் அடங்கியுள்ளன.

இது மட்டுமா? முழுமையாக முன்கூட்டிய யூனிட்டுகள் 40 வாட் முழுமையான உச்ச மியூசிக் பவர் • இணையற்ற ஃப்ரீக்வன்ஸி ரெஸ்பான்ஸ் • மிகவும் குறைந்த அளவில், வேண்டாத ஒலி • அதிநவீன ஆர்ம், மேலும் கீழும்/பக்க-வாட்டிலும் முழுமையாக நகர்த்த.



**உங்கள் பிலிப்ஸ் டீலரிடம் இலவச செயல் விளக்கம்**

# பிலிப்ஸ்

* எக்சைஸ் தீர்வை உள்பட அதிகபட்ச சில்லறை விலை. மாநில விற்பனை வரி மற்றும் பிற உள்ளூர் வரிகள் தனி.


காந்தமான அலங்காரம் கவர்ந்திழுக்க
காந்தமுள்ள பொட்டிடுவீர் நெற்றியிலே.
கவிபாடுதே உங்கள்
கண்கள்... கவர்ச்சி காட்டுதே
ரோஜா இதழ்கள். கட்டழகு
மலருதே. நெற்றி கொண்ட
சிங்கார் குங்குமத்தால்.
சிங்கார்... உன்னத
பொருட்களால் உருவானது.
உங்கள் உள்ள நிலைக்கும்
உடை அழகுக்கும் ஏற்ற
வண்ணங்களிலே.
சிங்கார்
குங்குமப் பொட்டு
— இந்தியாவின்
ஒப்பற்ற
அழகுதிலகம்.
Shingar